# "செந்தமிழ்ச் செல்வி"

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

## உள்ளுறை

# பெண்ணினப் பேரொளி



திருமதி இந்திராகாந்தி

தோற்றம் :
19—11—1917

மறைவு :
31—10—1984



இந்தியத் துணைக்கண்டத்தின் புதிய தலைமை அமைச்சர்

மாண்புமிகு இராஜிவ்காந்தி

# அம்மையார் கலந்துகொண்ட கடைசி நிகழ்ச்சி




30—10—84 இல் ஒரிசாவிலுள்ள கோபால்பூர் என்னுமிடத்தில் அம்மையார் வான்எறிபடைப்பள்ளி மையம் ஒன்றினைத் துவக்கிவைத்தபோது எடுத்த படம்

———



தீன்மூர்த்தி பவனில் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்த திருமதி. இந்திரா காந்தியின் உடலுக்குக் குடியரசுத் தலைவர் மேதகு ஜெயில்சிங் அவர்கள் மலர்வளையம் வைத்து வணங்குகிறார். பிரதமர் ராஜீவ்காந்தியும் உடனிருக்கிறார்.

## சாந்திவனத் துயரக் காட்சிகள்



சந்தனக் கட்டைகளால் அடுக்கப்பட்ட சிதையின்மீது
வைக்கப்பட்டிருக்கும் அன்னை இந்திராவின் உடலுக்கு
மைந்தர் ராஜீவ்காந்தி எரியூட்டுகிறார்



உற்றார் உறவினர் சூழ்ந்து நிற்க
அன்னை இந்திராவின் உடலுக்கு ராஜீவ் காந்தி எரியூட்ட,
சிதை கொழுந்துவிட்டெரிகிறது

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு-ருகூ  தி. வ. ஆண்டு உ௦கரு, ஐப்பசி  பரல்-ரூ

நவம்பர் 1984

---

# பெண்ணினப் பேரொளி மறைந்தது!

நம் இந்தியத் திருநாடு ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகள் அயலவர் பிடியில் சிக்கி, உரிமைகள் பறிக்கப்பட்டு, வளங்கள் சுரண்டப்பட்டு, வறுமை மிஞ்சி, அடிமை வாழ்வென்னும் இருட் கடலில் ஆழ்ந்து கிடந்தது.

அவ் வேளையில், அஃதாவது சென்ற நூற்றாண்டின் இறுதி யில் காந்தியடிகள் ஒரு பேரொளி விளக்காகத் தோன்றினார். பாரத நாட்டின் அடிமைத் தளையினை அறுத்தெறிந்தார். அதற்காக அவர் பட்டபாடுகள் கொஞ்ச நஞ்சமல்ல. இறுதியில் அவ் வயலவரின் ஆட்சியினின்று ஒருவாறு நாட்டை மீட்டு உரிமையின் பரிசாக விடுதலை வாழ்வை அளித்தார். அத்தகைய அண்ணல் காந்தியடிகளை 1948இல் ஒருவன் சுட்டுக் கொன்றான். அப் பேரொளியும் மறைந்தது.

வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்ததுபோல் விடுதலை வாழ்வு கிட்டிய பின் அதனை நுகர இயலாமல் திட்டமிட்டு ஆட்சி நடத்த இயலாமல் நாடு தவித்த காலையில் புதிய பாரதத்தை உருவாக்க, நமக்குப் பண்டித சவகர்லால் நேரு அவர்களின் தலைமை கிடைத்தது.

'ஆசிய சோதி' எனப் புகழப்பெற்ற அப் பேரொளியின் பேராற்றலால், நாடு புதுவாழ்வு பெறத் துவங்கிற்று. ஐந்தாண்டுத் திட்டங்கள் அடுக்கடுக்காய் நிறைவேற்றப்பட்டன. மக்களாட்சி மலர்ந்தது; உள்நாட்டுக் குழப்பங்கள் மறைந்தன. சாதி—சமய—மொழி வேறுபாடுகள் தலைகாட்டாதொழிந்தன. நேரு அவர்கள் பகைவர்களையும் நண்பர்களாக்கிக் கொண்டு, அயலவர் படையெடுப்

பினின்று நாட்டைப் பாதுகாத்து, வளம் பெருக்கி மக்களுக்கு வாழ் வளித்தார். ஆனால் 1964இல் இயற்கை அப் பேரொளியை அணைத்துவிட்டது. அரசியலில் ஓர் இருள் சூழ்ந்தது. நாடு மீண்டும் ஓர் ஒளிவிளக்கைத் தேடியலைந்தது. அவ் வேளையில் லால் பகதூர் சாத்திரியார் தலைமை ஏற்று ஒருவாறு திறம்பட ஆட்சியை நடத்தி வந்தார். எனினும் தீயூழ் வசமாகக் குறுகிய காலத்தில் அவரையும் நாடு இழந்தது.

இங்ஙனம் அடுத்தடுத்து ஏற்பட்ட இழப்புகளால் இந்தியக் குடியரசு இடர்ப்பட்டுக்கொண்டிருந்த வேளையில்தான், பண்டித நேரு அவர்களின் திருமகளாரும், அரசியலில் பழுத்த பட்டறிவு பெற்றவருமான திருமதி இந்திரா காந்தி அவர்கள் இவ்விந்தியத் துணைக் கண்டத்தின் தலைமைப் பொறுப்பினை ஏற்றார்கள்.

அந்நாள் முதல் அரசியலில் ஒரு மறுமலர்ச்சி காணத் துவங் கிற்று. நேரு அவர்கள் கண்ட கனவுகள் நனவுகளாயின. திட் டங்கள் ஒன்றன்பின் ஒன்றாக நிறைவேறின. அவையும் போதா வென 20 அம்சத் திட்டங்கள் என, தனித் திட்டங்கள் தீட்டி நாட்டின் முன்னேற்றத்தில் ஒரு புதுமையினையும் விரைவான போக்கினையும் உண்டுபண்ணினார். நாடு தொழில் மயமாயிற்று. அறிவியலில் முன்னேறத் துவங்கி அனைத்து நாடுகளும் வியக்கும் வண்ணம் விண் வெளி ஆய்விலும் முன்னேறிச் செயற்கைக் கோள்கள் பல விண் வெளியில் சுழலத் துவங்கின.

முடுகிவந்த பாகித்தான் படையெடுப்பு முறியடிக்கப்பட்டது. வங்காள தேயத்திற்கு வாழ்வளித்தோம். உள்நாட்டில் தலை தூக்கிய சாதி—சமய—மொழி—இனப் போராட்டங்கள் ஒருவாறு அடக்கப்பட்டு 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற உணர்வு மக்களிடம் தோன்றத் துவங்கிற்று. அரசுடைமை ஆக்கும் திட் டங்கள் பல தொடர்ந்தன.

இங்ஙனமெல்லாம் நாடு முன்னேற்றப் பாதையில் நடை போடத் துவங்கிய வேளையில்தான் இந்திரா காந்தி அம்மையார், அவர் தம் மெய்காப்பாளர்களால் அக்டோபர் 31ஆம் நாள் சுட்டுக் கொல்லப் பட்டார் என்ற செய்தி வந்தது. திடுக்கிட்டோம்; காவலர்களே அம்மையாரின் உயிர் குடிக்கும் கால தூதர்களாக மாறிய தீயூழை எண்ணி வருந்துகிறோம். உலக அமைதி நாடிப் பறந்தோடி வந்த, அமைதியின் சின்னமான புறா சுட்டு வீழ்த்தப்பட்டுவிட்டது!

"இந்த நாட்டின் நலத்திற்காகக் குருதி சிந்த நான் அஞ்ச வில்லை" என அடிக்கடி கூறிவந்த அம்மையாரின் கூற்று உண்மை யாயிற்று. அவர் குண்டடிபட்டபோது அவரது குருதி பாரதத் தாயின் மடியில் சிந்திற்று. நாடு கண்ணீர் சிந்திற்று.

'கண்ணிலான் பெற்றிழந்தான்' எனும்படி இந்தப் பெண்ணினப் பேரொளியும் மறைந்தது. மீண்டும் ஓர் இருள் சூழ்ந்த நிலை! என் செய்வது! எனினும் மறைந்த அம்மையாரின் திருமகனுர் ராஜீவ் காந்தி தலைமைப் பொறுப்பினை ஏற்றுள்ளார். நம்பிக்கை இழந்து நின்ற மக்களுக்கு இவர் ஒரு நம்பிக்கை ஒளியாக அமைந்துள்ளார். இவர்தம் துணை கொண்டு இந்திரா காந்தி அவர்கள் விட்டுச் சென்ற பணிகளைத் தொட்டுத் தொடர்வோம். நாட்டின் ஒருமைப் பாட்டினையும் ஒற்றுமையையும் காப்போம். குழப்பமான நிலையி லுள்ள இன்றைய அரசியல் நிலையில் நம்மிடையே உள்ள வேறுபாடு களையும் மாறுபாடுகளையும் மறப்போம். மறைந்த அம்மையாரின் இன்னுயிர் நன்னிலை அடைய இறையருளை வழுத்துவோம்.

———

### வரலாற்றில் ஓர் அதிகாரம் முற்றிற்று!

கொலையாளிகளின் துப்பாக்கிக் குண்டுகளுக்கு இரையான திருமதி இந்திராகாந்தியின் மறைவோடு இந்திய வரலாற்றில் ஓர் அதிகாரம் முடிந்துவிட்டது.

தம் மகள் இந்திராகாந்தியைப் பிரியதரிசினி என்று பண்டித நேரு அவர்கள் அன்போடு அழைப்பது வழக்கம். நைனி சிறையில் இருந்தபோது, அந்தப் பிரியதரிசினிக்கு எழுதிய கடிதங்களில் ஒன்றில்,

"வரலாறுகளைப் படிப்பது நல்லதுதான். எனினும் நாமே வரலாற்றை உருவாக்கத் துணைபுரிவது அதனினும் நல்லது"

என்று எழுதியிருந்தார்.

சிலருடைய வாக்கு தப்பாது. அதனை வேதவாக்கு என்பார்கள். அதுபோல அந்தக் கடிதத்தில் நேரு அவர்கள் எழுதிய உரைகள் உண்மையாகிவிட்டன. இந்திராகாந்தி 1966ஆம் ஆண்டில் இந்தியாவின் தலைமைப் பதவியினை ஏற்ருர். கடந்த 18 ஆண்டு அரசியல் வரலாற்றில் அம்மையாரின் வாழ்க்கை பின்னிப் பிணைந்து விட்டது. பல சிக்கல்களும், திருப்பங்களும் நிறைந்த கொந்தளிப்பான வரலாருக அஃது அமைந்துவிட்டது.

1984 அக்டோபர் 31ஆம் நாளோடு அந்த வரலாறு முடிந்து விட்டது!

வாழ்க இந்திரா காந்தி அவர்களின் புகழ்!

———

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு" குறள். 336

# உலகம் வியக்கும் தலைவி!

[பேராசிரியர் சிவ. சிவராமலிங்கம், எம். ஏ.
தமிழ்த்துறைத் தலைவர், எஸ். ஐ. வி. இ. டி. கல்லூரி, சென்னை.]

ஏழையர் வாழ்வுக் காக இராப்பகல் உழைத்த அன்னை
கோழையர் குண்டால் ஆவி கொடுத்தனர் கொடுமை அந்தோ!
ஊழையும் வெல்ல வல்ல ஊக்கமும் திறனும் கொண்ட
வாழையை வெட்டி விட்டார். வளர்கன்றை வளர்த்து வாழ்வோம். 1

உலகெலாம் அறிந்த நாட்டின் ஒருபெருந் தலைவி யாக
அலகிலாப் பெருமை காந்தி, அற்புதத் தலைவர் நேரு,
நலம்விழை தாகூர் ஆன நல்லவர் இவர்க்குப் பின்னால்
பலர்புகழ் அம்மை யன்றோ பண்பினால் உயர்ந்து நின்றார்! 2

இந்திய நாட்டின் மேன்மை எழில்பெறத் திட்டம் தீட்டிச்
சிந்தனை முழுதும் நன்மை சிறந்திடப் பயன்ப டுத்தி
விந்தைசெய் அணுவை ஆக்க வினைகளுக் குரிமை யாக்கி
முந்துநல் அறிவில் நாடு முன்வர வளங்கள் சேர்த்தார். 3

அறிவியல் துறையை ஊக்கி அகிலமே வியக்கும் வண்ணம்
எறிகணை விண்ணில் ஏவி எதிரிலாக் கீர்த்தி யுற்றார்
வெறிவளர் உலகத் திந்நாள் வினயமாய் அமைதி காத்த
நெறியினை நல்லோர் வல்லோர் நெஞ்சுளே மதித்தல் செய்வர். 4

பகைவரும் புகழ்ந்து போற்ற பாரதப் பண்பைக் காத்து
வகைபெறும் உலக நாட்டின் வளங்களைக் கண்டு வந்து
மிகைநலம் நாமும் கொள்ள மேன்மையாய் உழைப்போம் என்றே
நகைமுகத் தோடு நாளும் நவின்றவர் நமது காந்தி. 5

இத்திரு நாட்டின் மக்கள் இதயமாம் மலரில் வைத்து
நித்தமும் பூசை செய்த நேருவின் மகளார் தம்மைப்
பித்தரின் குண்டு வீழ்த்திப் பெருகிடும் வெள்ளம் போல
ரத்தமே சொரிய வைத்தார் ராக்கதம் என்ன என்போம். 6

பாரத ரத்தி னத்தைப் பண்டித ஜவஹர் பெற்ற
பூரண அறிவின் ஊற்றைப் புண்ணிய முதல்வி தன்னை
வீரமாய் உலவி வந்த விரிபுகழ் தெய்வத் தாயைக்
கோரமாய்க் கொன்று விட்டார். கொடுமையோ கொடுமை அம்மா!

இறுதியாம் குருதிச் சொட்டும் இந்திய மண்ணுக் கென்றே
உறுதியாய்ச் சொன்ன மெய்ம்மை உலகமே வியக்கு தம்மா!
அறுதியிட் டொன்று சொல்வோம் அன்னையே மீண்டு வந்து
நறும்புகழ் ஆட்சி செய்யின் நாடெலாம் உய்யும் உண்மை! 8

---

# அன்னை இந்திரா

இந்தியத் துணைக் கண்டத்தின் வரலாற்றில் 1984 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 31 ஆம் நாள், மக்களாட்சி முறையில் நம்பிக்கை கொண்ட நெஞ்சங்களிலெல்லாம் துயரத் தீ பற்றிய நாள்!

வேலியே பயிரை மேய்வது போன்று, இப் பாரத நாட்டின் தலைமை அமைச்சர் திருமதி இந்திராகாந்தி அவர்களை அவர்தம் மெய்காப்பாளர்களே துப்பாக்கியால் சுட்டுக் கொன்றனர் என்ற செய்திகேட்டுத் திடுக்கிட்டோம்! செய்தி உண்மைதானா என்ற ஐயத்தால் அவதியுற்றோம்; பின்னர் ஐயம் அகன்று; ஆற்றொணாத் துயருற்றோம்.

அரசியல் தலைவர்களுள் ஒரு பெண்மணி கொலை செய்யப் பட்டது இதுவே முதல் முறையாகும்.

உள்நாட்டில் பல்வேறு சாதி—சமய—மொழி—இனப் போராட்டங்கள். எல்லையிலே தொல்லை; வல்லரசுகளின் அச்சுறுத்தல் என்னும் இன்னபிற அரசியல் சூறுவளிகட் கிடையே, 70 கோடி மக்களைக் கொண்ட ஒரு துணைக் கண்டத்தின் ஆட்சி என்னும் மரக் கலத்தை 16 ஆண்டுகளாகத் திறம்பட நடத்திச் சென்ற இந்திரா காந்தி அவர்கட்கு இத்தகைய முடிவு ஏற்பட்டது கண்டு நாடே கண்ணீரில் மூழ்கி இருக்கிறது—ஏன் உலகமே எனினும் பொருந்தும்.

உலகின் பல்வேறு நாடுகளின் தலைவர்கள் அம்மையாரின் மறைவு குறித்துத் தங்கள் இரங்கல்களைத் தெரிவித்திருக்கும் முறை யினையும், அம்மையாரின் இறுதிப் பயணத்தின்போது வந்திருந்து, இந்நாட்டு மக்களின் துயரத்தில் பங்கு கொண்ட பாங்கினையும் எண்ணிப் பார்க்கின்றபோது, அனைத்து நாடுகளிடமும் அம்மையார் கொண்டிருந்த நட்புறவும், அதன்மூலம் இந்நாட்டின் மாண்பினை நானிலம் அறியச் செய்த நாகரிகப் பண்பும் யாரும் பாராட்டாம லிருக்க இயலாது.

''இருபது அம்சத் திட்டம்'' என்ற பெயரில் நாட்டின் பொரு ளியல் சீர்பெறவும், மக்களின் இல்லாமை, போதாமை, அறியாமை ஆகிய நிலைகளை அகற்றிடவும் அம்மையார் வகுத்த ஆக்கப் பணிகள் மிகப் பல.

குறுநில மன்னர்கட்கு அளிக்கப்பட்டுவந்த 'மன்னர் மானியம்' என்னும் அரசுக் கொடையினை அகற்றிய செயலும், வங்கிகளையும்

நிலக்கரிச் சுரங்கங்களையும் நாட்டுடைமை யாக்கிய செயலும் அம்மையாரின் முற்போக்குக் கருத்தினையும் பொதுநிலை (Socialism) உள்ளத்தையும் பறைசாற்றுவனவாகும்.

அனைத்துக்கும் மேலாக நாட்டின் ஒருமைப்பாட்டிலும், ஒற்றுமையிலும் நாட்டம் செலுத்தி அவற்றை வலியுறுத்தி வந்ததோடு, அவற்றிற்கெனக் கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டதும் குறிப்பிடத் தக்கதாகும்.

வல்லரசுகள் தம்முடைய வல்லமையைக் காட்டத் தோள் தட்டி நிற்கும் இவ் வேளையில், அம்மையார் சின்னஞ்சிறு நாடுகளின் கூட்டுச் சேரா கூட்டமைப்பிற்குத் தலைமை தாங்கியதும், ஆசிய நாடுகளின் விளையாட்டுப் போட்டிகளைத் தில்லி மாநகரில் நடத்திக் காட்டிய ஆர்வமும், விண்வெளி ஆய்வில் நாம் யாருக்கும் பின் வாங்கியவர் அல்லோம் எனக் காட்டும் வகையில் செயற்கைக் கோள்களை விண்ணிலே செலுத்தி அதன்மூலம் அறிவியலிலும் இந்நாடு முன்னேறுகிறது எனக் காட்டிய பெருமையும் எண்ணி மகிழத் தக்க சிறப்புமிக்க செயல்களாகும்.

இந்தி மொழியின் மேலாண்மை இன்னமும் நம்மை அச்சுறுத்தியவண்ண மிருந்தபோதிலும் மற்ற தலைவர்களைப்போல் அதன் வெறித்தனத்தை வெளிக்காட்டா வகையில் அவ்வப்போது நேரு அவர்களின் வாக்குறுதியை நிறைவேற்றுவதாகக் கூறிவந்தமை நமக்கு ஓரளவு மன நிறைவினை அளித்துவந்தது. இனி அரசியல் பீடம் ஏறுவோர் என் செய்வார்களோ யாம் அறியோம்!

அம்மையாரின் வரலாற்றுச் சுருக்கம் பிறிதோரிடத்தில் தரப்பட்டுள்ளது.

இங்ஙனம் பல்லாற்றுனும் பகுத்தறிந்து அரசியல் பணிகளை ஆற்றிவந்த அம்மையார் இயற்கை எய்தினர்கள்—காலமானர்கள் என்றெல்லாம் கூறப்பட்டிருந்தாலும் நமது துயரம் இத்துணைப் பெரிதாயிருந்திராது. ஆனால், கொடியவர்களால் கொல்லப்பட்டார்கள்—வாளுக்கும் வன்போருக்கும் அஞ்சாத அம்மையார் வஞ்சகத்திற்கு இரையானர்கள் என்பதை எண்ணும்போதுதான் நமது துயரம் அதன் எல்லையைக் கடக்கின்றது!

காந்தியடிகள் கொலைசெய்யப்பட்டபின், இனி இந்த மண்ணில், அத்தகைய கொடுஞ்செயல் நிகழாது என்றே எண்ணியிருந்தோம். எழுத்தாலும் பேச்சாலுமே கருத்து வேற்றுமைகள் களையப்படும் காலம் வந்துள்ளது, இனி வேட்டுமுறைக்கு வேலை இராது என்றே எண்ணினேம். அந்த எண்ணங்கள் மண்ணாயின.

தில்லிமாநகரம் பல அரசியல் கொலைகட்கு இடமாயிருந்து வந்ததை வரலாற்றில் படித்திருக்கிறோம். ஆனால் வஞ்சகத்தின் துணை நாடி வாழ நினைப்போர் இன்னமும் உளர் என்பதையே இத்தகைய கொடுஞ் செயல்கள் காட்டுகின்றன.

அம்மையார் கொலை செய்யப்பட்டதில், கொலைமட்டுமன்று, நம்பிக்கைக் கேடு நயவஞ்சகம் இரண்டும் கலந்துள்ளதை நினைக்கும் போது என்ன சொல்வதென்றே புரியவில்லை. காவலுக்கு நின்றவர் களே, அஃதாவது உயிரைக் காக்கவேண்டியவர்களே—உயிரைப் போக்குபவர்களாக மாறினால் உலகிற்கு உய்வுதான் ஏது?

சூலியஸ் சீசரை அடுத்திருந்து கொன்றான் புரூட்டஸ்!

மெய்ப்பொருள் நாயனாரைச் சிவவேடம் தாங்கிவந்து கொலை செய்தான் முத்தநாதன்!

காந்தியடிகளைக் கைத் துப்பாக்கியோடு வணங்கி அவர்மீது குண்டுகளைப் பொழிந்தான் கோட்சே!

இவை அனைத்துக்கும் மேலாகப் பெண் என்றும் பாராமல் திருமதி இந்திராகாந்தி அவர்களைப் பொறித் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றனர், புதல் மறைந்து பொல்லாங்கு செய்த காவலாளர்.

"தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து"

என்ற வள்ளுவர் வாக்கிற்கு வழிவழியாக விளக்கம் தந்துகொண் டிருக்கிறது இன்றைய அரசியல் உலகம்!

எப்படியோ ஒன்று, அம்மையாரவர்கள் இன்று நம்மிடையே இல்லை. நோயுற்று நொந்து மனம் வாடாமல், பாயிற் படுக்காமல், ஓர் நொடிக்குள் விழுப்புண் பெற்று வீர மறைவுற்றனர்.

முன்னர் காந்தியடிகளின் மறைவால் ஓர் உலகப் பேரொளியை இழந்தோம். அடுத்து நேரு அவர்களின் மறைவால் ஆசியப் பேரொளியை இழந்தோம். இப்போது திருமதி இந்திராகாந்தி அவர்களின் மறைவால் பெண்ணினப் பேரொளியை இழந்துவிட்டோம்!

நடந்தவை நடந்தவைகளாக இருக்கட்டும். இனி நடப்பவை யேனும் நல்லவையாக நடக்கட்டும்! மறைந்த தலைவர்கள் காட்டிய வழி நின்று இவ் விந்தியத் திருநாட்டின் மக்களாட்சிப் பண்பினை மாண்புறச் செய்வோம்.

வாழ்க இந்திராகாந்தி அவர்களின் புகழ்!

———

# இந்திராகாந்தி அவர்களின் வரலாற்றுச் சுருக்கம்

1917 நவம்பர் 19இல் பண்டித சவகர்லால் நேரு, கமலா நேரு ஆகியோரின் திருமகளாக அலகாபாத் என்னுமூரில் தோன்றினர்.

1926 மார்ச்சில் பெற்றேருடன் ஐரோப்பாவுக்குச் சென்ருர். ஜெனிவாவிலும் பெக்சிலும் கல்வி கற்ருர். சுவிட்சர்லாந்தில் உயர்கல்வி பெற்ருர்.

1928 காந்தியடிகளின் இராட்டின சங்கத்தின் குழந்தைகள் பிரிவை ஏற்படுத்தினர். நேரு தம் மகளுக்கு எழுதிய கடிதங்கள் 'ஒரு தந்தை தன் மகளுக்கு எழுதிய கடிதங்கள்' என்னும் நூலாக வெளிவந்தது.

1932-38 பம்பாய் பல்கலைக் கழக மெட்ரிகுலேசன் தேர்வில் தேறினர். பின்னர் சாந்திநிகேதனில் கல்வி பயின்ருர். பின்னர் இங்கிலாந்தில் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த சோமர் வில்லி கல்லூரியில் சேர்ந்து படித்தார்.

1938 பிப்ரவரி 28இல் அன்னை கமலா நேரு மறைவு.

1938-39இல் தந்தையார் இந்தியாவுக்கு வந்தபோது இந்திராவும் அவருடன் வந்தார். அதனால் படிப்பு தடைப்பட்டது.

1942 மார்ச்சு 26இல் பிரோஸ் காந்தியை மணந்தார். ஆகஸ்டு 8இல் பம்பாய் காங்கிரஸ் கூட்டத்தில் கலந்துகொண்டார், 'வெள்ளையனே வெளியேறு!' என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

1942-43 கைது செய்யப்பட்டு 1942 செப்டம்பர் 19 முதல் 1943, மே 13 வரை நைனி சிறையில் அடைபட்டிருந்தார்.

1944 ஆகஸ்டு 20இல் பம்பாயில் திரு. இராஜீவ் காந்தியைத் தலைமகனுகப் பெற்றெடுத்தார்.

1946 திசம்பர் 14இல் இரண்டாம் மகன் சஞ்சய் காந்தியைத் தில்லியில் பெற்றெடுத்தார்.

1947-48 காந்தியடிகளின் அறிவுரைப்படி தில்லியில் வகுப்பு ஒற்றுமைக்காகப் பணியாற்றினர்.

1955 காங்கிரஸ் செயற்குழு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

1956 செப்டம்பர் 22இல் அலகாபாத் நகர காங்கிரஸ் தலைவரானர்.

1958 பிப்ரவரி 23இல் நேருவுக்குப் பதிலாக நாடாளுமன்ற மையக் குழுவின் உறுப்பினராக அமர்த்தப்பட்டார்.

1959-60 இந்திய தேசிய காங்கிரசின் தலைவரானார்.

1960 செப்டம்பர் 8இல் கணவர் பிரோஸ் காந்தி காலமானார்.

1964 மே 27இல் தந்தை பண்டித சவகர்லால் நேரு காலமானார். லால்பகதூர் சாத்திரியார் தலைமை அமைச்சர் ஆனார். இவர் அமைச்சரவையில் செய்தி ஒலிபரப்பு அமைச்சர் ஆனார். ஆகஸ்டு 20இல் ராஜ்யசபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1966 நாடாளுமன்ற காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு சனவரி 24இல் இந்தியாவின் தலைமை அமைச்சரானார்.

1967 பிப்ரவரி 23இல் ரெபரேலி தொகுதியில் போட்டியிட்டு நாடாளுமன்ற உறுப்பினரானார்.

1969 காங்கிரஸ் கட்சியில் பிளவு. சூலை 19இல் வங்கிகளை நாட்டுடைமை ஆக்கினார்.

1971 மார்ச்சு 17இல் மீண்டும் காங்கிரஸ் நாடாளுமன்றக் கட்சித் தலைவரானார். திசம்பர் 16இல் பாகிச்தானுடன் போரிட்டு 'பங்களா தேசம்' தனிநாடாக உருவாக உதவினார். திசம்பர் 18இல் பாரத ரத்தினம் என்னும் விருதினைப் பெற்றார்

1977 பிப்ரவரியில் நடைபெற்ற பொதுத் தேர்தலில் இந்திரா தோல்வியுற்றார். மொரார்ஜி தேசாய் அமைச்சரவை ஏற்பட்டது. அக்டோபர் 4இல் கைது செய்யப்பட்டு, உடன் விடுதலை செய்யப்பட்டார்.

1978 சிக்மகளூர் தேர்தலில் வெற்றி பெற்றார்.

1979 மொரார்ஜி தேசாய் அமைச்சரவை முடிவு. சுவர்ண்சிங் பதவி ஏற்றார்.

1980 பொதுத்தேர்தலில் ஜனவரி 15இல் வெற்றி பெற்று இந்திரா மீண்டும் தலைமை ஏற்றார். சூன் 23இல் சஞ்சய் காந்தி விமான வீழ்ச்சியில் காலமானார்.

1983 கூட்டு சேரா நாடுகள் குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்.

1984 சூன் 2இல் பஞ்சாப் மாநிலத்தில் ஏற்பட்ட கிளர்ச்சியினை அடக்க சீக்கியர் பொற்கோயிலில் இந்தியப் படைவீரர்கள் புகுந்தனர்.

1984 அக்டோபர் 31இல் சீக்கிய மெய்காப்பாளர்களால் இந்திரா காந்தி அவர் வீட்டின் அருகில் சுட்டுக் கொல்லப்பட்டார்.

———

# இரங்கலுரைகள்

## உலக அமைதிக்குப் போராடிய வீராங்கனை

இந்திய மக்களின் தலைவியை ஒரு கொடியவன் கொலை செய்த செய்தி கேட்டுப் பெருந்துயரும் கவலையும் கொள்கிறோம். இந்திரா ஒரு சிறந்த நாட்டுத் தலைவராகவும், உலக அமைதிக்காகப் போராடிய வீராங்கனையாகவும், சோவியத் நாட்டின் சிறந்த நண்பராகவும் திகழ்ந்தார்.

**உருசியத் தலைவர், கோன்ஸ் டான்டின்சேர்னகே.**

## கொடுஞ்செயல் புரிவோரை எதிர்ப்போம்!

நம்மையெல்லாம் அச்சுறுத்தும் கொடுஞ் செயல் புரிவோரை எதிர்த்து நாம் போரிட வேண்டும். திருமதி இந்திரா காந்தி கொடுமையாகக் கொலை செய்யப்பட்டது நமக்கு இதைத்தான் நினைப்பூட்டுகிறது. திருமதி காந்தி அவர்களின் எண்ணங்களைப் புதுப்பிக்கவும், உலகில் கொடுமைகளைக் களையவும் முயல வேண்டும்.

**அமெரிக்கத் தலைவர் ரீகன்.**

## கொடுமையைக் கண்டிக்கிறோம்

பொறுப்பற்ற ஒரு சிறு கூட்டத்தினரின் வெறிச் செயலுக்கு இந்திரா இலக்காகிவிட்டார். இப்படிப்பட்ட கொடுஞ்செயலை இங்கிலாந்து மக்கள் அனைவரும் வன்மையாகக் கண்டிக்கின்றனர்.

**இங்கிலாந்தின் தலைமை அமைச்சர் திருமதி மார்கிரட் தாட்சர்.**

## கொடுஞ்செயலைக் கண்டிக்கிறேன்

திருமதி இந்திரா கொலை செய்யப்பட்டது கேட்டுத் திடுக்கிட்டேன். இத்தகைய கொடுஞ் செயல்களை வன்மையாகக் கண்டிக்கிறேன்.

**ஜெயவர்த்தன, இலங்கை.**

## உடன்பிறப்பை இழந்தேன்

இலங்கை ஓர் உண்மையான நண்பரையும், இந்தியா பெருந் தன்மையுள்ள அதன் மகளையும் இழந்துவிட்டது. திருமதி இந்திரா

எனக்கு நண்பராக மட்டுமின்றி உடன்பிறப்பாகவுமிருந்தார். அவரது உள்ள உறுதியைப் பாராட்டுகிறேன்.

திருமதி பண்டாரநாயகா, இலங்கை.

## கண்ணீரில் மிதக்கிறது இந்தியா !

பிரதமர் இந்திரா காந்தி கொல்லப்பட்டது மிகமிக அநாகரிகமான கொடுஞ் செயல். அவர் சுட்டுக் கொல்லப்பட்டார் என்பதை நம்பவே முடியவில்லை. சனநாயகத்தில் நம்பிக்கை கொண்ட யாரும் இந்த வன்செயலைப் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள். அம்மையாரின் மறைவால் இந்திய தீபகற்பமே கண்ணீரில் மிதக்கிறது.

தி. மு. க. தலைவர், கலைஞர் மு. கருணாநிதி.

## காட்டு மிராண்டிச் செயல்

இந்திரா காந்தி சுட்டுக் கொல்லப்பட்ட செய்தி கேட்டுத் திடுக்கிட்டேன். இஃது எல்லாராலும் கண்டிக்கப்படவேண்டிய காட்டு மிராண்டிச் செயல்.

முன்னாள் தமிழக முதல்வர் எம். பக்தவத்சலம்.

## வீரமரணம் அடைந்தார் !

திருமதி இந்திரா காந்தி மறைவு கேட்டுத் திடுக்கிட்டேன். அவர் வீர மரணம் அடைந்தார்.

மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சிவஞானம்.

## கோழைகளின் கொடுஞ்செயல்

திருமதி இந்திரா காந்தி கொலை செய்யப்பட்ட செய்தி கேட்டுத் திடுக்கிட்டேன் கலங்கினேன். கீழ்த்தரமான இச் செயலைச் செய்தவர்கள் கோழைகள், காட்டுமிராண்டித்தனமான இச் செயலை வன்மையாகக் கண்டிக்கிறேன்.

பங்காள தேசத் தலைவர் ஹுசைன் முகம்மது எர்சாட்.

## எல்லோராலும் கண்டிக்கத்தக்கது

இந்திராவின் மறைவுச் செய்தி கேட்டுத் திடுக்கிட்டேன். கோழைத்தனமான இச் செயல் எல்லோராலும் கண்டிக்கத்தக்கது. இந்திராவின் இன்னுயிர் இறையடியில் அமைதி பெற வேண்டுகிறேன்.

முன்னாள் இந்தியத் தலைமை அமைச்சர் மொரார்ஜி தேசாய்.

## வரலாற்றுப் புகழ் பெற்றவர்

செய்தி கேட்டுத் திடுக்கிட்டேன். இந்திரா கொல்லப்பட்ட இச் செயல் துன்பந்தருஞ் செயல். நான் திருமதி காந்தியின் கருத்துகட்கு வேறுபட்டிருந்தாலும், இந்திய வரலாற்றில் அவர் களின் பங்கு மிகப் பெரிது என்பதை யாரும் மறுக்க இயலாது.

**உழவர் சங்கத் தலைவர் சரண்சிங்.**

## புலனாய்வுத் துறை சரியில்லை

திருமதி இந்திரா கொலை செய்யப்பட்டது இந் நாடு முழுமைக் கும் துயர்தரும் செய்தி. இது இந்தியப் புலனாய்வுத் துறைக்குப் பெருந் தோல்வியாகும்.

**ஜகஜீவன்ராம்.**

## நாடே அதிர்ச்சியில் ஆழ்ந்துவிட்டது

இந்திரா காந்தி அவர்களுடன் நமக்குக் கருத்து வேற்றுமைகள் பல இருக்கலாம். ஆனால் பல வழிகளில் அம்மையார் குறிப்பிடத் தக்க அறிவாற்றல்கள் பெற்றவர் என்பதை அவருடைய அரசியல் எதிரிகளே ஒப்புக்கொள்வர். அப்படிப்பட்டவர் கொலை செய்யப் பட்டது மிகக் கொடிய செயல். இச் செயல் நாடு முழுமையையும் அதிர்ச்சியுறச் செய்துவிட்டது.

**பாரதீய ஜனதா கட்சித் தலைவர் அதல் பிகாரி வாஜ்பாய்.**

## துயர் களைவோம்

பாரதத் தலைமை அமைச்சர் திரு. இராஜீவ் காந்தி அவர்கட்குப் பாகித்தான் அதிபர் ஜியா அனுப்பியிருக்கும் செய்தியில், ''துயரமிக்க இந்தச் சூழ்நிலையில் இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பு தங்கள்மீது சுமத்தப்பட்டிருக்கிறது. இஃது தங்கட்கு அதிகப்படியான சுமை யாகும். இவ்வேளையில் இந்தியா பாகித்தான் இடையே நட்புறவு நிலைக்கப் பாகித்தான் பாடுபடும் என்பதைத் தெரிவித்துக் கொள் கிறேன்'' என்று பாகித்தான் அதிபர் ஜியா உல்ஹக் தெரிவித் திருக்கிறார்.

---

## திருமதி இந்திராவின் இறுதிப் பயணம்

திருமதி இந்திரா காந்தியின் இறுதிப் பயணத்தில் கலந்து கொள்ள வெளிநாட்டுத் தலைவர்களும் தலைமை அமைச்சர்களும் பெருமக்களுமாக ஏறத்தாழ 105 வெளிநாட்டார் வந்திருந்தனர். இவர்களுள் நாட்டுத் தலைவர்கள் பதினைந்து பேர், கவர்னர் ஜெனரல் ஒருவர், அரசர் ஒருவர், துணைத் தலைவர்கள் எழுவர், இளவரசர் இருவர், இருபத்தைந்து தலைமை அமைச்சர்கள், நாட்டின் செயலர்

ஒருவர், துணைத் தலைமை அமைச்சர் எழுவர், மற்றும் அயல்நாட்டு அமைச்சர்கள் பலர்.

இவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் சோவியத் நாட்டுத் தலைமை அமைச்சர் நிக்கோலை திக்கனேவ், அமெரிக்க ஐக்கியநாட்டு அரசுச் செயலர், இங்கிலாந்து தலைமை அமைச்சர் மார்கரட் தாட்சர், பாகிஸ்தான் தலைவர் ஜியா, பங்காளதேசத் தலைவர் எர்சாட், இலங்கைத் தலைவர் ஜெயவர்த்தனே, சப்பான் தலைமை அமைச்சர் யசுகிரோ நாகசோனே, சீனத் துணைத் தலைமை அமைச்சர் யா இ லின், பூட்டான் மன்னர் சிக்மே சிங்கை வான்சுக் ஆகியோரும் மற்றும் ஐரோப்பிய நாடுகளின் முகவர்களும் கீழைநாட்டு முகவர்களுமாவர்.

தீன்மூர்த்தி பவனிலிருந்து 3—11—84 நண்பகல் 12-30 மணியளவில் ஒப்பனை செய்யப்பட்ட பீரங்கி வண்டியில் திருமதி இந்திரா அவர்களின் உடல் சாந்திவனம் நோக்கி, பெருந் திரளான மக்களின் கண்ணீர் அலைகளினிடையே புறப்பட்டது.

3000 படை வீரர்கள் புடைசூழ, முப்படைகளையும் சேர்ந்த வீரர்கள் 1000 பேர் முன்செல்ல, முப்படைத் தளபதிகளால் சுமக்கப்பட்டு, பீரங்கி வண்டியில் வைக்கப்பட்ட உடல் மெல்ல நடைபோட 3-15 மணிக்குச் சாந்திவனம் அடைந்தது. அங்கு 3-30 மணியளவில் உடல், சந்தனக் கட்டைகளால் அடுக்கப்பட்ட சிதையின்மீது வைக்கப்பட்டது. இந்து முறைப்படி சமக்கிருத மந்திரங்கள் ஓதப்பட்ட வண்ணமிருந்தன. மற்ற மதத்தவர் மறைகளும் ஓதப்பட்டன. திருமதி காந்தியின் தலைமகனுர் திரு. இராஜீவ் காந்தி சிதையை ஏழுமுறை சுற்றிவந்து அன்னையின் உடலுக்கு எரியூட்டினுர். அப்போது மணி 3-48. அதனைத் தொடர்ந்து உற்றுர் உறவினர், வந்திருந்த பெருமக்கள் ஆகிய அனைவரும் திருமதி காந்திக்கு உரிய இறுதி வணக்கங்களைத் தெரிவித்தனர்.

## என்புத் துகள் (அஸ்தி) கரைப்பு

எரியூட்டப்பெற்ற திருமதி இந்திராவின் என்புத் துகள் திங்களன்று காலை 35 கலசங்களில் அடைக்கப்பட்டு, பல்வேறு மாநிலங்கட்கும் அனுப்பப்பட்டது. அவை தனி தொடர் வண்டிகளில் உரிய வழிபாட்டிற்குப் பின் அனுப்பப்பட்டன. சென்னைக்குக் கடந்த 6—11—84இல் வந்து சேர்ந்த என்புத்துகள் கலசம், சென்னை இராசாசி மண்டபத்தில் பொதுமக்களின் வழிபாட்டிற்காக வைக்கப்பட்டது. தமிழக அரசின் தலைவர்களும் பொதுமக்களும் திரளாகச் சென்று அதனை வணங்கிவந்தனர்.

இவ் வழிபாடுகள் முடிந்தபின் இவ் என்புத் துகள் (அஸ்தி) இமயமலையின் மீதுள்ள பனிப் பாறைகளின்மீது தூவப்படுகிறது.

---

# பாவாணர் பாதையில்....

## [பேராசிரியர் இரா. மதிவாணன்]

உலகில் ஒவ்வொரு பொருளில் தோற்றம் அமைப்பு இயக்கம் ஆகியவற்றை ஏன் எப்படி என்னும் வினாக் கணைகளால் துளைத்து உண்மை காண்பது பகுத்தறிவின் பயன். பொருள்களின் விளைவுகளுக்குக் காரணம் தேடியவன் அறிவி (விஞ்ஞானி) ஆனான். மாந்தன் சாவுக்குக் காரணம் தேடியவன் மருத்துவனானான். மாந்தனின் பிறப்புக்குக் காரணம் தேடியவன் மெய்ப்பொருள் அறிஞன் (தத்துவ ஞானி) ஆனான். மொழிகளின் தோற்றத்திற்குக் காரணம் தேடியவர்கள் குறிப்பிட்ட காரணத்தை வரையறுக்க முடியாமலிருந்தபோது பொருந்திய காரணத்தைத் திருந்த எடுத்துக்காட்டிய மொழிநூல் முதறிஞர் பாவாணர் மொழி ஞாயிறுய்ச் சுடர்விட்டுத் திகழ்ந்தார். அது உலக முழுதும் ஒளிக்கதிர் பரப்பும் நாள் வருமா? அவர் கண்டறிந்த உண்மைகளுக்கு நூல் வடிவம் தர, உலக மொழி களனைத்திலிருந்தும் சான்றுகள் திரட்டி, திரட்டிய சான்றுகளின் துணையால் சொற்பிறப்பு. மூலமொழி தோற்றம், மொழிகளின் கிளைப்பு தழைப்பு தொடர்பான நெறி முறைகளை வகுத்து மொழி நூற் கதிரவனின் காலடிப் பாதையில் தடம் மாறாது பிறழாது அடியெடுத்து முடிவுறுகாறும் தாழாதுஞற்றும் தறுகண் வினைப்பாட்டாளர் முன்வந்துள்ளனரா? என்று தமிழன்பர் பலரும் வினவுகின்றனர்.

மாஃசு முல்லரும் கிரியர்சனும் செய்த முயற்சி சமற்கிருதத்தையும் வடபுல மொழிகளையும் வெளியுலகிற்கு அறிமுகப்படுத்தினும் அதுவே மொழிகளின் ஒப்பீட்டு ஆராய்ச்சிக்கும் வழி வகுத்தது. சென்ற திங்கள் 14—10—'84 முதல் 19—10—'84 வரை பிலடெல்பியாவில் நடந்த உலக சமற்கிருத மாநாட்டில் 20 நாடுகளிலிருந்து 300 அறிஞர்கள் உரையாற்றினும் அவ்வுரைகளுக்கு முடிமணியாக ஆய்வுரையாற்றிய பேராசிரியர் எமனோவ் இந்தியாவில் திரவிட மொழிக் குடும்பத்தை ஒப்பிட்டு ஆராய்ந்தாலன்றி, சிறப்பாகத் தமிழாய்வில் ஈடுபட்டாலன்றி ஒப்பீட்டு ஆய்வு நிறைவுறாது எனவும் தென்னகத்திலிருந்தும் வடபுலத்திலிருந்தும் மொழி நூலறிஞர்கள் திரவிடமொழி வடமொழி ஒப்பீட்டு ஆய்வில் ஈடுபட வேண்டும் என்றும் கருத்துத் தெரிவித்திருக்கிறார். சமற்கிருதத்தில் 0 விழுக்காடு சொற்கள் தமிழிலிருந்து சென்றவை என்பது பாவாணர் கண்ட உண்மை.

நான்கு வேதங்களிலும் இதுவரை பொருளறியப்படாத சொற்களுக்குத் தமிழின் துணைகொண்டே பொருளறிய முடியும். இருக்கு வேதத்தில் உள்ள பல தமிழ்ச் சொற்களைப் பேராசிரியர் பரோ சுட்டிக் காட்டியிருக்கிறார். அதர்வண வேதத்தில் பொருளறியப் படாத சொற்கள் பல வடபுல மக்களின் அன்றாட பேச்சு வழக்கில் இடம் பெற்றுள. சிந்துவெளி கால முதல் ஆரியர் வருகை வரை செந்தமிழாக இருந்த வடபுல மொழிகள் சிதைந்து திரிந்த நிலைகளைப் பாவாணரின் ஆராய்ச்சி ஒன்றுதான் புலப்படுத்த முடியும். மேலையாரிய மொழிகளுக்குத் தமிழே மூலம் எனக் கண்டறிந்த அருள்திரு ஞானப்பிரகாச அடிகளார் ஐரோப்பாவில் அறிஞர் பலரையும் கண்டு உரையாடி அவர்களைப் புலங்கொளச் செய்த முயற்சிகள் தோல்வியுற்றன. எனினும், காலம் இப்போது கனிந்துள்ளது. திரு. ஞானகிரி நாடார் செய்த அதே முயற்சிக்கு மேனாட்டறிஞர் பலர் வாழ்த்தும் வரவேற்பும் தெரிவித்திருக்கின்றனர்.

மொழி ஞாயிறு பாவாணரிடம், ''மேனாட்டறிஞர்களுக்குத் தங்கள் கண்டுபிடிப்புகளைத் தெரிவியுங்கள்'' எனக் கூறியபோது, 'சொற்பிறப்பியல் அகரமுதலிப் பணி நிறைவுற்ற பிறகு உலகமொழி நூலறிஞர்களனைவர்க்கும் முறையாகத் தெரிவிப்பேன்' என்று மறுமொழி விடுத்தார். கண்ணிலி காலன் முதுபேராசானை அதுவரை விட்டு வைக்கவில்லை.

கீழ்த்திசை மொழிகளை ஆய்வு நோக்கில் அணுகும் ஆர்வம் மேனாடுகளில் முகிழ்த்துள்ளது. பாவாணரை உலக நாடுகளுக்கு அறிமுகப்படுத்தும் பணியில் ஈடுபடும் தமிழறிஞர்கள் யார் யார்?. அவர்கள் பணி எத்தகையது என்பதைத் தமிழகம் நுனித்துக் கணித்தறிய ஆவல் கொண்டுள்ளது.

ஆய்வு நோக்கம் என்பது தரப்படும் சம்பளத்தை அடிப்படையாகக் கொண்டதன்று. மொழிஞாயிறு வறுமையின் பிடியிலிருந்தவாறே ஆய்வுத் தவத்தில் கண்மூடிக் கிடந்தார். பேராசிரியர் எமனோவ் ஏல் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்டம் பெற்று ஒன்பதாண்டுகளாக வேலை கிடைக்காமல் தவித்தார். அக்காலத்தை வீணாக்க விருப்பமின்றித் தமிழகத்திற்கு வந்து நீலமலைப் பழங்குடிகளின் மொழிகளை 1955இல் ஆராயத் தொடங்கினார். ஆராய்ச்சி மனப்பாங்கை உடன்பிறந்த ஊக்கமாகக் கொண்டவரே பாவாணரின் சொற்பிறப்பு ஆய்வில் ஈடுபடமுடியும் என்பதற்கு இது எடுத்துக்காட்டாகிறது. ஆய்வுக்குரிய அனைத்து அடிப்படைச் செய்திகளையும் திரட்டாமல் ஆய்வு செய்வது முற்றிலும் பயன் தராது. மொழியாய்வின் நோக்கத்தைப் புரிந்துகொள்ளாமல் ஆய்வு செய்வதும் அறவே பயன் தராது.

சான்றாக, சமற்கிருதத்தை மேனாட்டார் பயிலத் தொடங்கிய காரணத்தைச் செருமானிய மொழி நூலறிஞர் முனைவர் மைக்கேல் விட்சல் அமெரிக்க பிலடெல்பியாவில் நடந்த உலக சமற்கிருத மாநாட்டில் பின்வருமாறு எடுத்துக் காட்டியிருக்கிறார் : சமற்கிருதத்தின் இலக்கிய வளத்துக்காகச் செருமானியர் முதன்முதல் அதனைக் கற்கத் தொடங்கினர். பிறகு அணுக்குண்டு செய்யும் அறிவியல் சமற்கிருத மொழியில் இருப்பதாக நம்பி அதனைக் கற்க பேரார்வம் காட்டினர். அது உண்மையன்று என்று தெரிந்த பிறகு சமற்கிருதம் மேலையாரிய மொழிகளின் தாயாகுமா? எனக் கண்டறிய ஆய்வு நடத்தினர். ஆய்வு முடிவில் மேலையாரிய மொழிகளும் சமற்கிருதமும் வேறொரு மூல மொழியிலிருந்து பிறந்தவை எனக் கண்டனர். இந்த ஆய்வு முடிவுகளைப் பாவாணர் கண்டுபிடிப்புகள் மொண்டு நிற்கின்றன என்பதை ஞால மொழி நூலறிஞர்கள் இன்னும் புரிந்து கொள்ளவில்லை.

பாவாணரின் வழிஞராகக் கூறிக்கொள்வோர் பலரும் பாவாணர் சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளைகளாக இருக்கின்றனர். மேற்கொண்டு ஓரடியேனும் அவர் பாதையில் முன்னேறும் அடிச்சுவடு காண முடியவில்லை. மற்றும் சிலர் பாவாணர்க்கு மாறான வேறான நெறிகளில் உழன்று அடுக்கு மொழி நடையழகில் அடுக்காத தூற்றல்களை வாரியிறைத்து ஆரவாரிக்கின்றனர். இந்நிலையில் பாவாணர் பாதை எது? யார் யார் எங்கு பிறழ்கின்றனர்? எனத் தெளிவுபடுத்துவது என் கடனாகின்றது. மேலை மொழி நூல் வல்லுநர்களின் மொழியாய்வுகள் எவ்வகையில் பாவாணர் பாதைக்கு ஒளி கான்று வழிகாட்டி நெறிப்படுத்தும் என்பதையும் விளக்க முற்படுகின்றேன்.

———

## நிலைத்திடுக!

இந்திய நாட்டின் பெண்ணொளியே
இனியர் நேருவின் கண்மணியே
நுந்தமைப் பேணும் வீரர்களே
நும்மை இன்று வஞ்சகத்தால்
செந்நீர் சிந்திடக் கொன்றிட்டார்
சிறுமை இதைவிடப் பிறிதுண்டோ?
இந்தியத் தாயே உமதான்மா
இறைதிரு வடியில் நிலைத்திடுக!

—நாஞ்சில், கா. கணபதி.

# சங்க நூல்களில் மூங்கில்கள்

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

சங்க நூல்களில் ஐந்து வகை முக்கிய மூங்கில்கள் கூறப்பட்டுள்ளன. அவை மூங்கில், பெருவெதிர், வேய், அமை, காம்பு ஆகியவையாகும். பொதுவாக இவை எல்லாவற்றிற்கும் மூங்கில் என்று உரையாசிரியர்கள் பொருள் கூறியிருப்பினும் அறிவியலறிவோடு ஆராயுங்கால், இவை மூங்கிலின் வகைகள் என்பது தெளிவாகின்றது. இவைகளைப் பிரித்து உய்த்தறிய மலையாளம், தெலுங்கு முதலிய திராவிட மொழிகளில் இப்பொழுது வழங்கும் பெயர்கள் உதவுகின்றன. மூங்கில் என்ற பெயர் பொதுப் பெயராக வழங்கினும் சங்க காலத்தில் மூங்கில் என்ற பெயர் ஒரு குறிப்பிட்ட மூங்கில் வகையினையே குறிப்பிட்டு வழங்கியுள்ளது.

''ஈன்றுநாள் உலந்த மென்னடை மடப்பிடி
கன்றுபசி களைஇய பைங்கண் யானை
முற்ரு மூங்கில் முளைதரு பூட்டும்
வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை'' —அகம். 85

''.....................உயர்மிசை
மூங்கில் இளமுளை திரங்கக் காம்பின்
கழைநரல் வியலகம் வெம்ப மழை மறந்து'' —அகம். 241

''முளைவளர் முதல மூங்கின் முருக்கிக்
கிளையொடு மேய்ந்த கேழ்கிளர் யானை'' —அகம். 332

''முளையணி மூங்கிலிற் கிளையொடு பொலிந்த
பெரும்பெயர் எந்தை அருங்கடி நீவி'' —அகம். 268

''வேங்கை தாய வோங்குமலை யடுக்கத்து
ஆடுகழை நிவந்த பைங்கண் மூங்கில்
ஓடுமழை கிழிக்கும் சென்னி'' —நற்றிணை 28

''மூங்கில் அங்கழை தூங்க ஒற்றும்'' —நற்றிணை 366

''கான்முளை மூங்கிற் கவர்கிளை போல
உய்தல் யாவதுநின் னுடற்றி யோரே''
—பதிற்றுப்பத்து 84-12

''ஓங்குவரை யடுக்கத்துத் தீந்தேன் கிழித்த
குவையுடைப் பசுங்கழை தின்ற கயவாய்ப்

பேதை யானை சுவைத்த
கூழை மூங்கிற் குவட்டிடை யதுவே''

—குறுந்தொகை 179

மூங்கில் என்ற பெயர் பொதுப்பெயராக எல்லா மூங்கில்களுக்கும் வழங்கினுலும் சிறப்பாக ஒருவகை மூங்கிலுக்குச் சங்க நூல்களில் வழங்கியுள்ளது. இந்த மூங்கில் பரவலாகக் குன்றுகளில் காணப்படும். இலையுதிர் காடுகளில் (Deciduous Forests) காணப்படும். வேங்கடமலையில் இருந்த மூங்கிலைப்பற்றி அகநானூறு (85) கூறியுள்ளது. இந்த மூங்கில் கூட்டமாக வறட்சியான காடுகளில் 3000 மற்றும் 4000 அடிவரை காணப்படும். இந்த மூங்கில்தான் கடும் வறட்சியைத் தாங்கக்கூடியது. இந்த மூங்கிலைக் கல் மூங்கில் என்று பாமர மக்கள் அழைப்பர். இந்த மூங்கிலை அறிவியலில் (Dendro calamus strictus) என்று அழைப்பர். இந்த மூங்கில் தான் தூண்களாகவும் வீடுகளில் கழிகளாகவும் ஈட்டி போலவும் பயன்படுகிறது. மனிதனுக்கு மிகுதியும் இம் மூங்கில் பயன்படுவதால் எல்லா மூங்கில் வகைகளும் இதன் பெயரால் அழைக்கப்படுகின்றன.

சங்க நூல்களில் இருவெதிர் என்று ஒருவகை மூங்கில் கூறப்படுகின்றது.

''செருவுறு குதிரையிற் பொங்கிச் சாரல்
இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்''

—குறுந்தொகை 385

''அருங்கடி மாமலை தழீஇ யொருசார்
இருவெதிர்ப் பைந்தூறு கூரெரி நைப்ப''

—மதுரைக்காஞ்சி 301 - 302

''இருவெதிர் ஈர்ங்கழை தத்திக் கல்லென''

—மலைபடுகடாம் 207

''இருவெதிர் ஈர்ங்கழை ஏறிச் சிறுகோல்''

—ஐங்குறுநூறு 280

''வழுவப் பிண்டம் நாப்பண் ஏமுற்று
இருவெதிர் ஈன்ற ஏற்றிலைக் கொழுமுளை
சூன்முதிர் மடப்பிடி நாண்மேயல் ஆரும்'' —நற்றிணை 116

இந்த மூங்கிலின் அரிசியை அண்மைக் காலத்தில் 'தோரை' என்றழைத்தனர். இதை அரிசி போல் உண்பர். மூங்கில் வகைகளில் மிகப் பெரியதாகக் காணப்படுவது இருவெதிர் என்ற பெரு மூங்கில் ஆகும். இந்த மூங்கில் நீலகிரி முதலிய இடங்களிலுள்ள

காடுகளிலும் மேற்குத் தொடர்ச்சி காடுகளிலும் காணப்படும். மிகுந்த முள்ளுடையது. மூங்கில் தண்டுகள் ஓட்டையாக இருக்கும். இஃது ஏழு அங்குலம் வரை விட்டம் இருக்கும். இந்த மூங்கிலின் கணுக் களில் கூரிய முட்கள் உண்டு. கூட்டம் கூட்டமாக மலைக்காடு களில் காணப்படும். இந்த மூங்கில் ஏறக்குறைய முப்பது ஆண்டு களுக்கு ஒருமுறை பூக்கும். பூக்கள் மிகப்பெரும் கொத்தில் காணப் படும். இந்த மூங்கிலின் கணுக்களில் ஒரு வெண்மையான கல் போன்ற கசிவுப் பொருள் அரிதாக அகப்படுகின்றது. இதை மூங்கி லில் தோன்றும் முத்து என்றனர். இந்த மூங்கில் பூக்கும் காலத் தில் மூங்கில் நெல் நிறைந்து காணப்படும். இந்த நெல்லைத் தின்ற எலிகள் ஏராளமாகப் பெருகும். இந்த மூங்கில் முளையில் நஞ்சு உண்டு. இந்த மூங்கிலைத் தின்ற சூலுள்ள யானையின் கருப்பம் நழுவினதாக நற்றிணை (166) கூறியது அரிய உண்மைச் செய்தி யாகும். வெதிரில் உழக்கு செய்வதைக் கலித்தொகை (96) கூறி யுள்ளது.

பெருவெதிரை பெருமூங்கில், பெருவரை மூங்கில் என்றழைத் துள்ளனர். கன்னடத்தில் Hebbidru (பெருவெதிரு) தெலுங்கில் வெதுரு, முள்ளு வெதுரு என்றுமழைப்பர். இதை அறிவியலில் Bambusa Arundinaesea என்றழைப்பர்.

சங்க நூல்களில் முந்தூழ் என்றதொரு மூங்கில் குறிப்பிடப் பட்டுள்ளது.

''பாம்புமிழ் மணியிற் றோன்றும்
முந்தூழ் வேலிய மலைகிழ வோற்கே''

—குறுந்தொகை 239

''கடுஞ்சூல் மடப்பிடி நடுங்குஞ் சாரல்
தேம்பிழி நறவின் குறவர் முன்றில்
முந்தூ ழாய்மலர் உதிரக் காந்தள்'' —அகம். 78

முந்தூழ் என்ற வகை மூங்கில் சங்க நூல்களில் கூறப்பட்டுள்ளது. இந்த மூங்கிலும் ஒருவகைப் பெருமூங்கிலாகும், பெருமூங்கில் தெலுங்கு மொழியில் 'முந்தல வெதுரு' என்றழைக்கப்பட்டுள்ளது. தெலுங்குப் பெயர் 'முந்தாழ் வெதிர்' என்பதின் மாற்றமாகும். முந்தூழ் என்பது மூங்கிலின் மற்றொரு பெயராகவும் கொள்ளலாம். நிகண்டுகளில் மூங்கிலின் பெயராக முந்தூழ் கூறப்பட்டுள்ளது. முந்தூழ் என்ற மூங்கில் குறிஞ்சிப் பாட்டில் உந்தூழ் என்றழைக்கப் பட்டுள்ளதைக் காணலாம்.

''உரிதுநா றவிழ்ந்தொத் துந்தூழ் கூவிளம்''

—குறிஞ்சிப்பாட்டு 65

இவ் வரிக்கு நச்சினர்க்கினியர் 'தமக்கு உரித்தாக நாறும் விரிந்த கொத்தினையுடைய பெருமூங்கிற் பூ' என்று பொருள் கூறியுள்ளார். உந்தூழ் என்பது தவருன பாடமாகத் தெரிகின்றது. குறுந்தொகையும் அகநானூறும் நிகண்டுகளும் முந்தூழ் என்று கூறும்போது குறிஞ்சிப்பாட்டில் மட்டும் உந்தூழ் என்று கூறியது தவருக வந்ததாகும். உ. வே. சாமிநாதய்யர் 'தேமா என்பது முதல் உந்தூழ்', என்பதிறுதியாகவுள்ள வரிகள் தருமபுரவாதீன மடத்திலிருந்து கிடைத்த ஒரு பழைய ஏட்டுப் புத்தகத்தில் மட்டும் இருந்தன என்று எழுதியிருப்பதால் உந்தூழ் என்ற பெயரும் இவ் வரிகளும் இடைச்செருகலாக இருக்கலாம். முந்தூழ் என்பது பொதுவாக மூங்கில் என்றழைக்கப்படுகின்றதெனக் கருதலாம். பல ஆண்டுகளுக்கு ஒரு முறை பூக்கும் மூங்கிலாக இருக்கலாம்.

சங்க நூல்களில் பல பாடல்களில் அமை என்ற மூங்கில் வகை குறிக்கப்பட்டுள்ளது.

"கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கட் டேறல்"
—திருமுருகாற்றுப்படை 194 - 195

"திருந்தமை விளைந்த தேக்கட் டேறல்"
—மலைபடுகடாம் 522

"பெருமலை வாங்கமை பழுனிய நறவுண்டு
வேங்கை முன்றிற் குரவையுங் கண்டே" —நற்றிணை 276

"குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து"
—புறப்பாட்டு 129

"ஆடுஅமைப் பணைத்தோள் அரிமயிர் முன்கை"
—பொருநராற்றுப்படை 32

"வணைபுனை யெழின்முலை வாங்கமைத் திரடோள்
மலர்போன் மழைக்கண் மங்கையர் கணவன்"
—மலைபடுகடாம் 57-58

"திருந்தமை விளைந்த தேக்கட் டேறல்"
—மலைபடுகடாம் 522

"ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோள்
பேரமர்க் கண்ணி யிருந்த வூரே" —குறுந்தொகை 131

"செருவுறு குதிரையிற் பொங்கிச் சாரல்
இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்"
—குறுந்தொகை 385

''வாங்கமைக் கண்ணிடை கடுப்ப யாய்'' —அகம். 18

''வெல்போர் வானவன் கொல்லி மீமிசை
நுணங்கமை புரையும் வணங்கிறைப் பணைத்தோள்''
—அகம். 33

''அலங்குகமை நரலத் தாக்கி விலங்கெழுந்து
கடுவளி உருத்திய கொடிவிடு கூரெரி
விடர்முகை அடுக்கம் பாய்தலின் உடனியைந்து
அமைக்கண் விடுநொடி கணக்கலை அகற்றும்''
—அகம். 47

''தோடமை அரிசிலம் பொலிப்பஅவள்
ஆடுவழி ஆடுவழி அகலேன் மன்னே'' —அகம். 49

''ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்
கோடை யவ்வளி குழலிசை யாகப்
பாடின் அருவிப் பனிநீர் இன்னிசை'' —அகம். 82

''தாழிருங் கூந்தனங் காதலி
நீளமை வனைப்பின் தோளுமா ரணைந்தே'' — அகம். 87

''அரிமதர் மழைக்கண் அமைபுரை பணைத்தோள்
அணங்குசால் அரிவையைக் காண்குவம்'' —அகம். 114

''தலையாற்று நிலைஇய சேயுயர் பிறங்கல்
வேயமைக் கண்ணிடை புரைஇ'' —அகம். 152

''மழைகால் அற்சிரத்து மாலிருள் நீங்கி
நீடமை நிவந்த நிழல்படு சிலம்பிற்'' —அகம். 205

''புதலிவர் ஆடமைத் தும்பி குயின்ற
அகலா அந்துளை கோடை முகத்தலின்'' —அகம். 225

''அந்தூம் பகலமைக் கமஞ்செலப் பெய்த
துறுகாழ் வல்சியர் தொழுவறை வௌவி'' —அகம். 253

''பைங்குழைத் தழையர் மகளிர்
கண்டிரள் நீளமை கடிப்பின் தொகுத்து'' —அகம். 331

''நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்
தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர்''
—அகம். 295

''வாங்கமை புரையும் வீங்கிறைப் பணைத்தோள்''
—அகம். 343

'நெடுங்கண் ஆடமைப் பழுநிக் கடுந்திறற்
பாப்புக் கடுப்பன்ன தோப்பி வான்கோட்டுக்''
—அகம். 348

"இந்நிலை அறியா யாயினுஞ் செந்நிலை
அமையா டங்கழை தீண்டிக் கல்லென" —அகம். 353

"அமையறுத் தியற்றிய வெவ்வாய்த் தட்டையின்"
—அகம். 388

"அவ்வாங் குந்தி அமைத்தோ ளாய்நின்" —அகம். 390

"உயங்குபிடி தழீஇய மதனழி யானை
வாங்கமைக் கழையின் நரலுமவர்" —அகம். 398

"உடைக்கண் நீண்டமை ஊறல் உண்ட
பாடின் தெண்மணிப் பயங்கெழு பெருநிரை"
—அகம். 399

"வாங்கமை பழுனிய நறவுண்டு" —நற்றிணை. 276

"நமக்கும் அரிய வாயின அமைத்தோள்
மாண்புடைக் குறுமகள் நீந்தி" —நற்றிணை 352

"வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்றோள்"
—பதிற்றுப்பத்து 12-22

"வீங்கிறைத் தடைஇய வமைமருள் பணைத்தோள்"
—பதிற்றுப்பத்து 54

"இமைப்பு வரை வாழாண் மடவோ
ளமைக்கவின் கொண்ட தோளிணை மறந்தே" —கலி. 21

"வாங்கமை மென்றோட் குறவர் மடமகளிர்" —கலி. 39

"வாடிய மென்றோளும் வீங்கின
வாடமை வெற்ப ளித்தக்காற் போன்றே" —கலி. 48

"அகன்மலை யடுக்கத்த வமையேய்க்கு மென்பதோ"
—கலித்தொகை. 45

அமை என்ற மூங்கில் வகையைக் கண்டுபிடிக்க மலையாள மொழி துணை புரிகின்றது. இந்த மூங்கிலை மலையாளத்தில் இன்றும் 'அம்மெய்' (Ammei) என்று அழைப்பர். இந்த மூங்கில் கேரளத்தில் நிறையக் காணப்படுகிறது. அமையின் கணுவுக்கு மகளிரின் தோள் உவமமாகப் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது. இந்த ஒப்புமையும் பொருத்தம். அமையின் தூம்பினுள் மதுவை வைத்து உண்டனர் என்பது தெரிகின்றது. வளைந்து கொடுக்கும் அமையில் வில் செய்வதும் கூறப்பட்டுள்ளது. அமைகள் ஒன்றோடு ஒன்று உரசி எரி காற்றால் பரவியது கூறப்பட்டுள்ளது அமையின் தண்டில் துளையுண்டானதால் காற்று அத்துளையில் செல்லும்போது குழலின் இசை போலக் கேட்டதைப்பற்றியும் கூறியுள்ளனர்.

அமையை அறுத்து ஓசைவிடும் தட்டையைச் செய்தலும் கூறப்பட்டுள்ளது. அமையின் உள்ளே உள்ள மெல்லிய தொலியைப் பிசைந்த துகள் போல நாரையின் இறக்கைகளில் தூள் இருந்ததைக் கூறியிருப்பது அரிய உண்மையான உவமையாகும். அமையின் தூம்பில் தேனை ஊற்றி மதுவாக்கித் தோப்பி என்ற மதுவை உண்பர் என்று கூறப்பட்டுள்ளது. அமை மூங்கிலை Ochlandre scriptorica என்று அறிவியலில் அழைப்பர்.

சங்க நூல்களில் வேய் என்ற மூங்கிலும் கூறப்பட்டுள்ளது.

''வெயில்முளி சோலைய வேயுயர் சுரனே''
—ஐங்குறுநூறு 327

''குன்ற வேயில் திரண்ட என்
மென்றோள் அஞ்ஞை சென்ற ஆறே'' —அகம். 15

''கடுங்கதிர் திருகிய வேய்பயில் பிறங்கல்'' —அகம். 17

''ஒய்பசிப் பிடியொ டொருதிறன் ஒடுங்க
வேய்கண் ணுடைந்த வெயிலவிர் நனந்தலை''
—அகம். 91

''காய்கதிர் கடுகிய கவினழி பிறங்கல்
வேய் கண் உடைந்த சிமைய'' - அகம். 399

''மாயம் அன்று தோழி வேய்பயின்று
எருவை நீடிய பெருவரை அகந்தொறுந்''
—நற்றிணை 294

''வேயெழில் வென்று வெறுத்ததோ ளேக்கி''
—பரிபாடல் 11 : 94

''அடியுறை மகளி ராடுந் தோளே
நெடுவரை யடுக்கத்து வேய்போன் றனவே''
—பரிபாடல் 14 : 5, 6

''நீசெலற்கு உரியை நெஞ்சே வேய்போல்
தடையின் மன்னுந் திண்ணிய திரண்ட
பெருந்தோள் அரிவை ஒழியக் குடாஅது'' —அகம். 199

''வெடிவேய் கொள்வது போல வோடித்
தாவு புகளு மாவே பூவே'' —புறம். 302

''வெயன்ன மென்றோளால்
மயிலன்ன மென்சாயலார்'' —புறம். 395

''பூவொடு புரையுங் கண்ணும் வேயென
விறல்வனப் பெய்திய தோளும் பிறையென''
—குறுந்தொகை 226

''வேய்புரை பெழிலிய விளங்கிறைப் பணைத்தோள்''
—பதிற்றுப்பத்து. 65 : 8

''கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலாற்''
—கலித்தொகை 11

''விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறைக்''
—கலித்தொகை 45

சங்க நூல்களில் வேயைப்பற்றிப் பல பாடல்களில் கூறப் பட்டுள்ளது. மேற்காட்டிய பாடல்களிலெல்லாம் வேய் என்ற மூங்கில் கூறப்பட்டுள்ளது. வேயினால் பந்தர் போடுவதும் வில் செய்வதும் கூறப்பட்டுள்ளது. வேயின் அரிசியும் கூறப்பட்டுள்ளது. கன்னட மொழியில் வேய் என்ற சொல்லே ஒருவகை மூங்கிலின் பெயராக வழங்குவதிலிருந்து வேய் என்பது எதுவென்று தெரிந்து கொள்ளலாம். கூரை வீடுகளில் இந்த மூங்கில் வேய்வதற்குப் பயன்படுத்தியதால் வேய் என்றழைக்கப்பட்டது.

வேய் உயர் நனந்தலை (அகம். 51), வேய் உயர் (ஐங்குறு நூறு 32) வேய் ஒழுக்கு (அகம். 213) வேய்க்கண் (அகம். 573) வேய்கரி கானம் (அகம் 55, சிலப்பதிகாரம் 13 : 36, மணிமேகலை 17 : 91) வேய்கொள் அரிசி (மலைபடுகடாம் 435) வேய்த்திரள் பந்தர் (சிலப்பதிகாரம் 13 : 194) வேய்நரல் விடரகம் (கலி. 40) வேய்ப்புறம் (தொல்காப்பியம் 111 : 61,3) வேய்ப்படு நனந்தலை - அகம். 295 வேய்பயில் அடுக்கம் (நற்றிணை : 93 : அகம். 312, 323) வேய்பயில் அழுவம் (நற்றிணை 46, 62, குறுந்தொகை அகம். 318, 327) வேய்பயில் இறும்பு (நற்றிணை 213, 264) வேய்பயில் சோலை (பரிபாடல் 11-25) வேய்பிறங்கழுவம் (நற்றிணை 62) வேய்வில் எயினர் (சிலப்பதிகாரம் 12-6 : 4) என்று பல பாடல்களில் வேயைப்பற்றிச் செய்திகள் வருகின்றன. இதை அறிவியலில் Ochlandra Travancorica என்று அழைப்பர்.

''கன்முகை விடரகஞ் சிலம்ப வீழும்
காம்புதலை மணந்த ஓங்குமலைச் சாரல்'' —அகம். 172

''மாஅல் யானை மறப்போர்ப் புல்லி
காம்புடை நெடுவரை வேங்கடத்து உம்பர்'' —அகம். 209

''மூங்கில் இளமுளை திரங்கக் காம்பின்
கழைநரல் வியலகம் வெம்ப மழைமறந்து'' —அகம். 241

''பழந்தூங்கு விடரகத் தெழுந்த காம்பின்
கண்ணிடை புரையும் நெடுமென் பணைத்தோள்''
—அகம். 271

''நாஞ்செலின் எவனோ தோழி காம்பின்
வணைகழை யுடைந்த கவண்விசைக் கடியிடி''
—அகம். 309

''யாம்பல புணர்ப்பச் சொல்லாள் காம்பொடு
நெல்லி நீடிய கல்லறைக் கவாஅன்'' —அகம். 385

''யாங்குச் செய்வாங்கொல் தோழி ஓங்குகழைக்
காம்புடை விடரகம் சிலம்பப் பாம்புடன்று''
—நற்றிணை 51

''ஓங்குமலை நாட ஒழிகநின் வாய்மை
காம்புதலை மணந்த கல்லதர்ச் சிறுநெறி'' —நற்றிணை 55

''நூற்றிதழ்த் தாமரைப் பூச்சினை சீக்கும்
காம்புகண் டன்ன தூம்புடை வேழத்து''
—ஐங்குறுநூறு 20

''காம்புசொலித் தன்ன வறுவை யுடீஇ''
—சிறுபாணாற்றுப்படை 236

காம்பு என்ற பெயர் ஒருவகை மூங்கிலுக்குச் சுருக்கி வழங்குகின்றது. காம்பின் உள் தொலிபோல் துணி மென்மையாக இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. காம்பு என்ற பெயரே இக்காலத்தில் பேச்சு வழக்கில் பயில்கின்றது. காம்பு என்ற மூங்கிலை அறிவியலில் Oxytenanthera Bourdillon என்றழைப்பர்.

தொல்காப்பியத்தில் விசை என்ற மரம் கூறப்பட்டுள்ளது. இதைப்பற்றிச் சங்க நூல்களிலோ பிற்கால நூல்களிலோ யாதொரு குறிப்புமில்லை. ஆனால் இதனை ஒருவகை மூங்கிலாகக் கருதலாம். மூங்கில்களில் சிலவகையை மடக்கும்போது விசைத்து வில்போல் எழும். ஆதலின் ஒருவகை மூங்கிலை விசையென்று அழைத்திருக்கலாம்.

மேற்கோள் நூல்கள் :

1. Flora of the Madras Presidency—J. S. Gamtle.
2. The Bombuseae of British India—J. S. Gamtle.

———

# கோனேரிராசபுரத்துக் குழப்பங்கள்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம்.பி.பி.எசு., டி.ஓ.]

(முன் இதழ் சுசஆம் பக்கத் தொடர்ச்சி)

இனி மூன்றுவது வடிவம் : இவ்வடிவம் அமர்ந்துள்ளது சற்று அரச தோரணையுடன் காணப்பட்டாலும், இடக்கையில் வெண் கொற்றக் குடை ஏந்தியுள்ளமையாலும், வலக்கரத்தை முஷ்டி முத்திரையில் மார்போடு பொருத்தியிருப்பதாலும், முதல் வடிவத் தில் பாதியளவே இருப்பதுபோல் வடிக்கப்பட்டிருப்பதாலும் இஃது அரசு அதிகாரிகளுள் ஒருவரெனக் கொள்ளலாம் இதுவும் ஆண் வடிவம் என்பது குறிப்பிடத்தக்கது.

நான்கு வடிவங்களுமே ஆண்வடிவங்களாக உள்ள இச்சிற்பத் தொகுதியில் செம்பியன் மாதேவியும் இருப்பதாகக் கற்பனை செய்த முதல் மனிதர் யாரென்பது தெரியவில்லை. பின்னால் வந்த ஆய்வறி ஞர்கள் அனைவருமே அதை அப்படியே வேதவாக்காகக் கொண்டு பின்பற்றியிருப்பதுதான் விந்தையாக உள்ளது, இச்சிற்பத்தொகுதி யைப் பார்த்தபிறகுதான் இவர்கள் இதைப்பற்றி எழுதியிருப்பார்கள் என்பது எத்தனை உண்மையோ, அத்தனை உண்மை இந்தச் சிற்பங் களை உடற்கூறியல் கண்ணோட்டத்திலும், படிம இலக்கண முறை யிலும் இவர்கள் பார்க்கவில்லை என்பது. இல்லையென்றால் இந்தத் தவறும் இப்படியொரு குழப்பமும் நேர்ந்திருக்க வழியே இல்லை.

திரு. வேதாசலம் பட்டியலிட்டுக் காட்டியிருக்கும் அத்தனைக் கோயில்களுக்கும் நான் சென்றேன். அங்குள்ள சிற்பவடிவங்களைக் கண்டதுடன் படங்களும் எடுத்து வந்துள்ளேன். இங்கு விரிவஞ்சி அவற்றைப் பற்றிய செய்திகளைச் சொல்லக்கூடவில்லை. அது தனிக்கட்டுரையாக அமையும்.

இனி நான்காவது குழப்பத்தைப் பார்ப்போம். இக்கோயிலில் இருந்து படியெடுக்கபபட்டுள்ள கல்வெட்டுக்களுள் ஒன்றில் 'மது ராந்தகி ஈசுவரமுடையார்' என்று ஒரு கோயிலின் பெயர் குறிக்கப் படுகிறது. அப்பெயர் இக்கோனேரிராசபுரத்து உமைக்கு நல்லவர் கோயிலுக்கு வழங்கப்பட்ட வேறு பெயரா அல்லது அப்பெயரில் தனியே ஒரு கோயில் இருந்ததா என்பதே குழப்பம் திரு. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் தம் நூலில், 'இரண்டாம் இராசேந்திரனு டைய ஏழாம் ஆட்சியாண்டில் திருநல்லம் கோயில் அவன் மகளாகிய மதுராந்தகி பெயரால் மதுராந்தகி ஈசுவரமுடையார்

கோயில் என்று வழங்கப்பட்டது' என்று கூறுகிருர். மேலும் அவரே, 'இரண்டாம் இராசேந்திரனுடைய பதினேராம் ஆட்சியாண்டில் இக் கோயில் இறைவன், தேவாரத்தில் வழங்கப்பட்டது போலவே உமைக்கு நல்லார் என்று வழங்கப்பட்டுள்ளார்' என்றும் அடுத்து எழுதுகிருர்[16] தம்முடைய மொழியாகவே இரு முரண்பட்ட கருத்துக்களைத் திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் கூறுகிருர். இரண்டாம் இராசேந்திரனின் ஏழாம் ஆட்சியாண்டில் மதுராந்தகி ஈசுவரர் என்றழைக்கப்பட்ட இறைவனை அதே மன்னனின் பதினேராம் ஆட்சியாண்டில் 'உமைக்கு நல்லார்' என்று பெயர் மாற்றி அழைத்ததாகக் கூறுவது பொருத்தமாக இல்லை. அப்படியானுல் நான்கே ஆண்டுகளில், மகள் மீது கொண்டிருந்த அன்பை இராசேந்திரன் விலக்கிக் கொண்டானு? அல்லது மதுராந்தகி மடிந்துவிட்டாளா? இங்கே ஒன்றைக் கருத்தில் கொள்ளவேண்டும். இந்த இரண்டாம் இராசேந்திரனின் திருமகளான மதுராந்தகிதான் முதற் குலோத்துங்கனை மணந்து பட்டத்தரசியானவள். அப்படியிருக்க அவள் உயிரோடிருக்கும்போதே, அவள் பெயரில் வழங்கிய ஒரு கோயிலுக்கு, நான்கே ஆண்டுகளில் பெயர்மாற்றம் செய்வதென்பது பொருத்தமாகத் தெரியவில்லை. அப்படியானுல் இப்பெயர் மாற்றம் நிகழ்ந்ததா? இல்லையா?

இங்கேதான் சற்றுக் கவனத்துடன் கல்வெட்டுகளை அணுக வேண்டும். இக்கோயிலில் இருந்து நாற்பத்திரண்டு கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டுள்ளன.[17] இவற்றுள் இரண்டாம் இராசேந்திரனுடையவை மூன்று. இந்த இரண்டாம் இராசேந்திரனின் மூன்று கல்வெட்டுகளுள் இரண்டு இவனுடைய மெய்க்கீர்த்தி வரிகளைக் கொண்டுள்ளன. ஒன்று 'திருமகள் மருவிய செங்கோல்' என்று தொடங்குகிறது.[18] இன்னென்று 'திருமாதர் புவியென்னும்' என்ற மெய்கீர்த்தியுடன் உள்ளது.[19] எனவே இவையிரண்டும் இரண்டாம் இராசேந்திரனுடையவைதான் என்பதில் யாதொரு ஐயமும் இல்லை. இவற்றுள் திருமருவிய செங்கோல் எனத் தொடங்கும் முதல் கல்வெட்டு இம்மன்னனின் ஐந்தாம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்டுள்ளது, ஊரவையார் திருநல்லம் கோயிலுக்கு ஒரு 'மா' நிலம் விற்ற செய்தியை இக்கல்வெட்டு தருகிறது. 'திருமாதர் புவி

16. முற்காலச் சோழர் கலையும் சிற்பமும், எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், பக். 343.

17. திருநல்லம் கல்வெட்டுகள், திருக்கோயில் செப். 83 இதழ், டாக்டர் இரா. கலைக்கோவன்.

18. ARE 625 of 1909

19. ARE 633 of 1909

யென்னும்' என்ற மெய்க் கீர்த்தியுடன் துவங்கும் இரண்டாவது கல்வெட்டு, கோனேரிராசபுரத்தில் மதுராந்தகி ஈசுவரமுடையார் என்ற பெயரில் ஒரு கோயில் இருந்ததைக் கூறுகிறது. இந்தக் கல்வெட்டைப் படியெடுத்தவர்கள் 'This discloses the name of a temple at Konerirajapuram called as Maduranthagi Eswaram, evidently so called after Maduranthagi D/o Rajendra-II and queen of Kulothunga-I'' என்று குறிக்கிருர்கள்.[20]

இனி இம்மன்னனுடையதாகக் கருதப்படும் மூன்ருவது கல்வெட்டைப் பார்ப்போம். இஃது இவனுடைய ஏழாம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்டுள்ளது. நிலக்கொடை பற்றிப் பேசும் இக்கல்வெட்டு, மதுராந்தகி ஈசுவரமுடையார் கோயிலில் இவ்வூரவையார் கூடிய செய்தியைத் தருகிறது.[21] இக்கல்வெட்டில் இரண்டாம் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி காணவில்லையாயினும், இதில் 'மதுராந்தகி ஈசுவரமுடையார்' என்ற கோயில் குறிக்கப்பெறுவதாலும், இக்கல்வெட்டில் இராசேந்திரனின் பெயர் இருப்பதாலும் எந்தவித தயக்கமும் இன்றி இதை இரண்டாம் இராசேந்திரனின் கல்வெட்டாகக் கொள்ளலாம்.

இம்மூன்றில் இரண்டு கல்வெட்டுகள் மதுராந்தகி ஈசுவரமுடையார் கோயிலைப்பற்றிப் பேசுகின்றன. ஒன்று இக்கோயில் இருந்த செய்தியையும் இன்னென்று இக்கோயிலில் ஊரவையார் கூடிய செய்தியையும் குறிக்கின்றன,

இனி, திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் இம்மன்னனுடையதென்று கூறும் கல்வெட்டைப் பார்ப்போம். இது திரிபுவனச் சக்கரவர்த்தி இராசேந்திர சோழதேவனின் பதிமூன்ராம் ஆட்சியாண்டில் வெட்டப்பட்டுள்ளது. காரைக்காட்டைச் சேர்ந்த வாணகோவரையரின் மனையாள் இக்கோயில் இறைவனுன உடையார் உமைக்கு நல்லாருக்குத் தங்க நகைகளும் வெள்ளி ஊதலும் வழங்கிய செய்தியை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.[22]

இஃது எந்த இராசேந்திரனின் கல்வெட்டு என்று கண்டுபிடித்து விட்டால் பாதிக்குழப்பம் தீர்ந்தாற் போலாகும். அரசாண்ட சோழமன்னர்களுள் மூன்று இராசேந்திர சோழர்கள் இருக்கிருர்கள். இவர்களுள் முதலாம் இராசேந்திரன் முப்பத்திரண்டு ஆண்டுகள்

---

20. A Topographical list of the Inscriptions of the Madras Presidency collected till 1915 with notes & references, V. Rangacharya Vol-II, P. 1388.

21. ARE 634 of 1909

22. ARE 648 of 1909

அரசாண்டவன். இம்மன்னனுடைய ஒன்பது கல்வெட்டுகள் இங்கிருந்து படியெடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் மூன்று, ஆட்சியாண்டு தெரியாதவை. பிறவற்றுள் ஒன்று இவ்வேந்தனின் ஐந்தாம் ஆட்சியாண்டிலும், இரண்டு ஏழாம் ஆட்சியாண்டிலும், ஒன்று பதினேழாம் ஆட்சியாண்டிலும், இன்னொன்று இருபத்தேழாம் ஆண்டிலும், பிறிதொன்று முப்பத்தோராம் ஆண்டிலும் வெட்டப்பட்டுள்ளன. இவற்றுள் சிலவற்றில் இறைவன் திருநல்லமுடைய மகாதேவர் என்று குறிக்கப் பெறுகிறார். இவற்றுள் எந்தக் கல்வெட்டிலும் இராசேந்திரனின் பெயர் 'திரிபுவனச் சக்கரவர்த்தி இராசேந்திர சோழதேவர்' என்று குறிக்கப் பெறவில்லை.

இரண்டாம் இராசேந்திரனும், அவனுடைய மூன்று கல்வெட்டுகளில் எதிலும் திரிபுவனச் சக்கரவர்த்தி இராசேந்திர சோழதேவர் என்று குறிக்கப்பெறவில்லை.

'திரிபுவனச் சக்கரவர்த்தி' என்ற தொடரை முதற்குலோத்துங்க சோழன் மெய்க்கீர்த்தியில்தான் முதன்முதலாகக் காண்கிறோம்[23] இந்தத் தொடர் குலோத்துங்கனுக்குப் பிறகு வந்த அத்தனைச் சோழமன்னர்களாலும் கைக்கொள்ளப்பட்டு வந்திருப்பதை வரலாறு கூறுகிறது. அப்படியானால் கோனேரிராசபுரத்துக் கல்வெட்டில் காணப்படும் 'திரிபுவனச் சக்கரவர்த்தி இராசேந்திர சோழதேவர்' முதற் குலோத்துங்கனுக்குப் பிற்பட்டவராகத்தானே இருக்கமுடியும்! முதற்குலோத்துங்கனுக்குப் பிற்பட்ட ஒரே இராசேந்திரன் மூன்றும் இராசேந்திரன்தான். இவன் முப்பத்து மூன்று ஆண்டுகள் அரசாட்சி செலுத்திய கடைசிச் சோழமன்னன்[24] எனவே, கோனேரிராசபுரத்தில் காணப்படும் திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராசேந்திர சோழதேவனின் பதினோராம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு மூன்றும் இராசேந்திரனுடையதே என்று துணியலாம், இதற்கு மேலும் வலுவூட்டுவதுபோல் இக்கோயிலில் முதற் குலோத்துங்கனில் ஆரம்பித்து மூன்றும் இராசராசன் வரை அவரவர் தம் காலகட்டங்களில் பொறிக்கப்பட்டிருக்கும் கல்வெட்டுகள் அனைத்திலும் 'திரிபுவனச் சக்ரவர்த்தி' என்ற தொடர் தப்பாமல் வருகிறது. அதே சமயம் முதற்குலோத்துங்கனுக்கு முற்பட்ட காலத்து மன்னர்களின் எந்த ஒரு கல்வெட்டிலும் இத்தொடர் காணப்படாமை இங்கு நினைவு கொள்ளத்தக்கது.

(தொடரும்)

———

23. பிற்காலச் சோழர் வரலாறு, தி. வை. சதாசிவ பண்டாரத்தார், பக். 639.

24. பிற்காலச் சோழர் வரலாறு, தி. வை. சதாசிவ பண்டாரத்தார், பக். 463.

# இராசேந்திர சோழன் கண்ட பர்மா

[திருக்குறள்மணி, டாக்டர் க. த. திருநாவுக்கரசு,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.]

முதலாம் இராசேந்திர சோழனுடைய ஆட்சிக் காலத்தில் (கி. பி. 1012—1044), சோழருடைய ஆதிக்கம் கடல் கடந்த நாடுகளில் பரவிற்று. இவனுடைய பதின்மூன்றும் ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளில் முதல் இராசேந்திரன் கடார நாட்டின்மீதும், ஸ்ரீவிசயத்தின்மீதும், மற்றும் பல்வேறு தீவுகளின்மீதும் படையெடுததுச் சென்று வெற்றிபெற்ற வரலாறு விரிவாகத் தரப்பட்டுள்ளன.

கடாரப் படையெடுப்பு கி.பி. 1025 அளவில் நடைபெற்றதாகத் தெரிகிறது. 'கடாரம்' என்பது 'பரக்கும் ஓதக் கடாரம்'[1] எனவும், 'குளிறு தெண்டிரைக் கடாரம்,[2] எனவும் சுட்டப்பட்டுள்ளதைத் தமிழ் இலக்கியங்களில் காணுகிறேம்.

பர்மாவில், பெகு நகருக்கு அருகில் ஆறுபட்டைகளைக் கொண்ட இரண்டு வெற்றித் தூண்களை அந்த நாட்டுத் தொல்லியலார் கண்டுபிடித்துள்ளனர். அவற்றை ஆராய்ந்த அறிஞர்கள், ''கி.பி. 1020-1025 அளவில் நடைபெற்ற இராசேந்திர சோழனின் படையெடுப்பின்போது, நாட்டப்பட்ட வெற்றித்தூண்கள் அவை'' எனும் முடிவிற்கு வந்தனர். அவற்றில் காணப்படும் எழுத்துக்கள், இராசராசன் காலத்திய கிரந்தத்-தமிழ் வடிவ அமைதியைக் கொண்டுள்ளன என்றும், 'பரகேசரி' எனும் பட்டப் பெயருடைய இராசேந்திரனையே அக் கல்வெட்டு சுட்டுகிறது எனவும் அவர்கள் துணிந்துள்ளனர்.

கி.பி, 1912 அளவில், இந்த இரு தூண்களின் கல்வெட்டுகளையும், பர்மியக் கல்வெட்டியல் துறையைச் சேர்ந்த அறிஞரும் தலைமை அதிகாரியுமான டே ஸெயென் கோ என்பவர், ''அவை இராசேந்திர சோழனுடைய வெற்றித்தூண்களே''[3] என்பதை அறுதியிட்டுக் கூறியுள்ளார்.

---

1. கலிங். தா. 138.
2. மேற்படி, 189.
3 Archaeological Report of Burma, 1908, Para 25, and also refor Epi. Burmanica (Eds.) C. Durioselle, and C.O. Blagden, Rangoon, Vol 2, p. 48, 1919-20.

ஆனால் 1918ஆம் ஆண்டில், கோயெடஸ் (Coedes) என்னும் டச்சுக்காரர், மலேயா தீபகற்பத்தில் உள்ள 'கெடா' எனும் பகுதியே, இராசேந்திர சோழனின் கல்வெட்டில் குறிப்பிடப்பட்ட 'கடாரம்' என்று கருதுவதாகத் தம்முடைய கருத்தைத் தெரிவித்தார்.

அவருடைய சமகாலத்தைச் சேர்ந்த இந்திய அறிஞர்களும் இக் கருத்தினையே ஏற்றுப் போற்றலாயினர். இதன் விளைவாக, இராசேந்திர சோழனுடைய கடல் கடந்த நாடுகளின் படையெடுப்பு வரைபடத்தில் இருந்து அறவே, பர்மா நீக்கப்பட்டுவிட்டது; அல்லது இருட்டடிப்புச் செய்யப்பட்டுவிட்டது.

1956ஆம் ஆண்டு, மார்ச்சு 24ஆம் நாள், 'தினசரி' இதழின் வார மலரில், 'காந்திராமன்' எனும் செட்டியார் பர்மியத் தமிழன் (நகரத்து செட்டியாருக்கும் பர்மியப் பெண்மணிக்கும் பிறந்தவர்), ''இராசேந்திரனுடைய வெற்றித் தூண்கள் புறக்கணிப்பு'' எனும் தலைப்பில் படங்களோடு ஒரு கட்டுரை எழுதி இருந்தார். அந்தக் கட்டுரையில், தம்முடைய கண்களாலேயே அக் கல்வெட்டுகளைக் கண்டதாகவும், ''திருமன்னி வளர இருநில மடந்தையும்'' எனத் தொடங்கும் வாசகம் சிதைந்த வடிவில் உள்ளதாகவும் தெரிவித்துள்ளார்.

'கடாரம்' எனும் பெயர், 'பர்மாவிற்கு'ப் பொருந்தாது என்பதை உடன்படலாம். ஆனால், வேறு பெயரால் அந்த நாடு அறியப்பட்டு இருக்கலாம். 'காழகம்'[4] எனவும், 'அருமண தேயம்'[5] எனவும் பண்டைக்கால, இடைக்காலப் புலவர்களால் பர்மா சுட்டப்பட்டுள்ளமை இங்கு நினைவுகூர்தற்குரியது. நச்சினார்க்கினியர் எனும் உரையாசிரியரே, 'காழகம்' என்பதனைக் 'கிடாரம்' என்று குறிப்பிட்டுள்ளார்.[6] ஆனால், சங்க காலத்தில், இச்சொல் கிடாரத்தைக் குறிப்பிட்டதாகக் கருத இயலாது. மற்றும் 'அருமணம்' எனும் சொல், பர்மாவின் பழங்குடி மக்களான 'மிராம்மா' (Mramma) எனும் பெயரின் திரிபாகும்.

'அருமண தேயத்தைப்' பற்றிய குறிப்பு இராசேந்திரனுடைய கடற்படையெடுப்பில் சுட்டப்படவில்லை. எனவே, அவன் பர்மாவின் மீது படையெடுத்துச் செல்லவில்லை என்பர். தம்முடைய பத்தாம் ஆட்சி ஆண்டில், இராசேந்திரன் வங்காளத்தின்மீது படையெடுதது்ச் சென்றான். கி.பி. 1024 அளவில் இந்தப் படையெடுப்பு நடைபெற்றது.

---

4. 'காழகத்து ஆக்கமும்' - பத்து. பட்டி' 191.
5. சிலப். 14:108, அடி: உரை.
6. பத்து. பட்டி. 191, உரை.

இராசேந்திரன் கல்வெட்டுகளில் சுட்டப்படும் 'வங்காளம்' பழைய கிழக்கு வங்காளம்; இன்றைய 'பங்காள தேசம்.' பங்காள தேசத்தில் வெற்றிகொண்ட சோழப்படைகள், அதற்குச் சற்றுக் கிழக்கில் உள்ள பர்மாவிற்குள் நுழைந்து பெரு நகர்ப் பகுதி வரையில் சென்று வெற்றித் தூண்களை நாட்டி இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

'தக்கணலாடம்' என்பது இந்திய வங்காளத்திலுள்ள ஹுக்ளி, ஹவுரா (கல்கத்தா நகரைச் சுற்றியுள்ள) மாவட்டங்களையே குறிக்கும். உத்தரலாடம் என்பது மூர்ஷிதாபாத், பீர்பம் மாவட்டங்களைத் தன்னகத்துக் கொண்டதாகும். இவற்றிற்குத் தென்கிழக்கே இருந்த நிலப்பரப்பையே 'வங்காளம்' என்று இராசேந்திரனுடைய கல்வெட்டு குறிப்பிடுகிறது.

சோழருடைய படைகளுக்கு வங்காளத்திற்குக் கிழக்கே உள்ள நாடு புதிய அரசாக அல்லது நாடாகத் தோன்ருமல் இருந்து இருக்கலாம். ஒரே அரசனுடைய ஆட்சிக்குட்பட்டதாக அது இருந்து இருத்தல் கூடும். 'கோவிந்தசந்தனுக்குரிய வங்காள தேசம்' என்று இராசேந்திரன் கல்வெட்டு சுட்டுகிறது.

இராசேந்திரன் இருமுறை கடல்கடந்த நாடுகளின்மீது படையெடுத்துச் சென்று இருத்தல் கூடும் என்று பேராசிரியர் ஆர்.சி. மஜூம்தார் கருதுகிருர்[7]. முதல் படையெடுப்பில் அந்தமான், நிக்கோபார் தீவுகளைக் கைப்பற்றி, அங்கிருந்து வடகிழக்குத் திசை நோக்கிச் சென்று பர்மாவையும் இராசேந்திரன் தாக்கி இருக்கலாம் என்பர்.

இந்தப் பின்னணியில், பர்மாவில் உள்ள இராசேந்திரனுடைய வெற்றித்தூண் கல்வெட்டுகளை ஆராயவேண்டும் என்பதே இந்த ஆய்வுரையின் நோக்கமாகும். 'முதலாம் இராசேந்திர சோழனுடைய காலத்தில், இந்தப் படையெடுப்பு நடைபெறவில்லை' என்பார் கூற்றினைக் கொள்கை அளவில் ஒப்புக்கொள்வோம். பர்மாவில் உள்ள இராசேந்திர சோழனுடைய வெற்றித் தூண்கள் வேறு யாருடையன என்பதையும், அத் தூண்களில் பொறிக்கப்பட்டுள்ள தமிழ்க் கல்வெட்டுகள் எந்த அரசனுடையன என்பதையும், அவை உணர்த்தும் செய்திகள் யாவை என்பதையும் ஆராய்ந்து அறிய வேண்டுவது நம்முடைய கடமை அல்லவா?

———

7. Kambuja-Desa, pp. 113-17 & *Artibus Asiae*, No. 24 (Coedes Commemoration Volume), pp. 338-342.

# "பர்" என்னும் வேர்ச்சொல்

[கழக இலக்கியச் செம்மல்,
புலவர் இரா. இளங்குமரன்]

'பர்' என்பதொரு வேர்ச்சொல். அது, முப்பெரும் பொருள் களின் அடிப்படையில் பன்னூறு சொற்களாய் விரிகின்றது. அம் முப்பொருள்கள் :

(1) பரவுதல் அல்லது விரிதல் (2) வளைதல் அல்லது வட்டமாதல் (3) திரள்தல் அல்லது பருத்தல் என்பவை.

பரவி விரியும் ஒன்று வளைந்து வட்டமாதலும் திரண்டு பருத்தலும், ஒன்றன் ஒன்று பெருகிய படிமான வளர்ச்சிகளேயாம்.

இவண், பரவுதல் அல்லது விரிதல் பொருட்சொற்களைக் காணலாம்.

ஓரிடத்தில் நிலைக்காமல் பல இடங்களை மாறி மாறி மருண்டு நோக்குவதும், நோக்க வேண்டும் இடத்து நோக்காது வேறிடத்து நோக்குவதும் 'பரக்கப் பார்த்தல்'; 'பரக்கப் பரக்கப் பார்த்தல்'; 'பராக்குப் பார்த்தல்' எனப்படும்.

வேறிடத்துப் பார்க்காமல் குறித்த காட்சியில் ஒன்ற வேண்டும் என்பதற்காகப் 'பராக்கு எச்சரிக்கை' எனக் கூறும் வழக்கம் அரசவை களிலே முந்து நடைமுறையில் இருந்தது. நீதி மன்றங்களில் 'அமைதி அமைதி அமைதி' என மும்முறை கூறும் இக்கால வழக் கத்திற்கு ஒப்பாயதாம் அது.

'பரங்கி' என்பதொரு காயும், ஒரு நோயும் ஆம். இரண்டும் பரவுதலால் வந்த பெயர்களாம். கறிக்கு உதவும் எக் காய்களினும் பரியது 'பரங்கி' எனப்படுகிறது. பட்ட இடத்தெல்லாம் பரவும் வெள்ளை வெட்டை பாண்டு பரங்கி என்பவை ஒருவகைய! பரங்கிக் காய் வெண்ணிறமாதலால் வெள்ளையரைப் பரங்கியர் என்றனர். ''வெள்ளைப் பரங்கியரைத் துரை என்ற காலமும் போச்சே'' எனப் பாடினார் பாரதியார்.

'பரசு' என்பது வாய் விரிந்து அமைந்த ஒருவகைக் கோடரி. அதனை 'மழு' என்றும் கூறுவர். மான் மழு வேந்துதல் இறைவன் கோலம்.

குவிந்து கிடக்கும் மண், குப்பை, தவசம் முதலியவற்றைப் பரவ விரித்தல் 'பரசுதல்' எனப்படும். மேடு பள்ளமறச் சமனிலைப்படுத்தி நிலத்தை ஒப்புரவாக்குதலும் பரசுதலாம். மண்படாமல் தவசம் அள்ளுதலைப் 'பரசி அள்ளுதல்' என்பர்.

இறைவனைப் பலப்பல புகழ்ந்து பாராட்டுதல் 'பரசுதல்', 'பரவுதல்', 'பராவுதல்' எனப் பல வகையாலும் சுட்டப்படும். இவையெல்லாம் பண்டை நூல்களிலேயே பயில வழங்கப் பெறுகின்றன.

பாராட்டிப் பெறுதலும், பாராட்டித் தருதலும் ஆகிய கொடை 'பரசை' எனப்படும். பரசை என்பது 'பரிசு' ஆகும். இகலிப் பெறுவது 'பரிசு' என்றும், இகலாமல் பெறுவது 'பரிசில்' என்றும், காதற் கொடையாய் வழங்கப்பெறுவது 'பரிசம்' என்றும் பரிசு வகையை முப்பாற்படுத்துக் கூறுவர்.

பல இடங்களிலும் 'அலைபணி' செய்யும் கூலியாளனைப் 'பரடன்' என்பது இலக்கிய வழக்கு.

காலடியின் அகன்று பருத்த மேற் பாகம் ஆமை ஓடு போன்ற அமைப்புடையது. அதனைப் 'பரடு' என்பர். அகன்ற காட்டு நிலத்தையும் 'பரடு' என்பர். விரிவுடையது என்பதே பொருளாம்.

எண்ணெய் தேய்த்து வாராமல்—முடியாமல்—விரிந்து கிடக்கும் தலையும், அகன்று விரிந்து இலையுதிர்ந்து கிடக்கும் மரமும் 'பரட்டை' எனப்படும். 'பம்பை பரட்டை' என்பது சிறுவர் விளையாட்டுப் பாட்டு. பம்பை என்பது, படிந்து பின் கழுத்தை மறைக்குமாறு தொங்கும் முடியாம்.

'பரண்', 'பரணம்', 'பரணி' என்பவை உயரமான இடப்பரப்பு என்னும் பொருள் தரும் சொற்களாம்.

சுவரின் மேல் கட்டைகளைப் பரப்பி, பலகைகளை விரித்துப் பரண் போடுவதும், கால்கள் நட்டு அவற்றின்மேல் கம்புகளையும் வரிச்சுகளையும் பரப்பி, தட்டை தாள் விரித்துப் பரண் போடுவதும் வீட்டிலும் காட்டிலும் காணப்படுவனவே.

புகழால் பரவி விரிந்து, புலவர் பாடும் புகழுக்கு இடமாக இருந்த புலவர் பெருமான் 'பரணர்' இவண் நினைதற்கு உரியர். 'கபில பரணர்' என்னும் தொடரும் ''பரணன் பாடினன் மற்கொல்'' (புறம். 99) என்னும் ஔவையார் வாக்கும், அதற்குப், ''பரணன் பாடினன் என்றது அவனும் தன் பெருமையாற் பாடினான்; பிறராற் பாடப்படுதல் அரிது என்றதாம்'' என்னும் பழைய உரையாசிரியர் உரை விளக்கமும் நோக்கத் தக்கனவாம்.

காலின் மேற்பரப்பும் கணுக்காலும் கூடிய பகுதி 'பரண்டை' எனப்படுவது, 'பரடு' என்பதுடன் ஒப்பிட்டுக் காணத்தக்கது. 'பரண்டுதல்' என்பது அகலம் படச் சொறிதலும் கிண்டுதலும் கிளறுதலுமாம். 'அடுப்பில் பூனை பரண்டுகிறது' என்பது வறுமையைச் சுட்டும் பழமொழி.

அகழ்தல், குத்துதல், கல்லுதல், துளைத்தல், தோண்டுதல் முதலியவை ஆழம்பட வினையாற்றலாயும், பரண்டுதல் அகலம்பட வினையாற்றலாயும் இருத்தலைக் கருதுக. கை, கால் முதலிய உறுப்புகளால் வினையாற்றுதலும் பரண்டுதலும். தகடு, சிப்பி, களை கொத்தி, மண்வெட்டி முதலியவை கொண்டு வினையாற்றுதல் சுரண்டுதலும் ஆம் என்பது கருதுக. களை கொத்தி, 'களை சுரண்டி' எனப்படுவதும் அறிக.

'பரணி' என்பது பல பொருள் ஒரு சொல்லாய் விரிகின்றது. முதற்கண், மூன்று கற்களை அகல அமைத்து ஆக்கிய அடுப்பைக் குறித்தது. பின், அவ்வடுப்புப்போல் அமைந்த நாண்மீனைக் குறித்தது. அதன்பின், அந் நாண்மீன் ஓரையில் நிகழ்த்தப்படும் வழிபாட்டைக் குறித்தது. அதற்கு மேலாக, அவ் வழிபாட்டைப் பற்றிப் பாடும் நூற்பெயராக விரிந்தது. தக்கயாகப் பரணி, கலிங்கத்துப் பரணி முதலிய நூல்களில் நிகழும் வழிபாட்டை அறிந்து கொள்க. ''ஆனையாயிரம் அமரிடை வென்ற, மானவனுக்கு வகுப்பது பரணி'' எனப்படும் பரணி இலக்கணமும் அறிக. பரவுதலும், புகழ்தலும், களிப்புப் பெருகுதலும் ஆகிய விரிவுகளுக்கெல்லாம் பரணி இடமாக இருத்தலைக் கண்டுகொள்க.

இனிப், பரணி என்பது தீ என்னும் பொருட்டது. 'அரணி' என்பது தீக்கடை கோலையும், அது கிளர்த்தும் தீயையும் குறிக்கும். அது விரிந்து பரவுங்கால் 'பரணி' எனப்படும்.

வாய் என்பது 'இடம்' என்னும் பொருள்தரும் சொல். அவ் வாய்க்கு நீர் வரும் வழி 'கால்வாய்', வாயினின்று வயலுக்கு நீர் செல்லும் வழி 'வாய்க்கால்!' வாய்க்காலுக்கும் கால்வாய்க்கும் உள்ள வேறுபாட்டை இவற்றால் அறிக. இவற்றின் பிற்சொல்லும் முற் சொல்லும் 'வாய்' ஆதல் அறிக! 'வாய்' இப்பொழுது 'கம்மாய்' என வழங்கப்படுகின்றது, அது 'கண்வாய்' என்பதன் பிழை வடிவாம்.

மான் கண், புலிக் கண், துடுப்புக் கண், நாழிக் கண் என மடையில் கண்கள் இருக்கும். அக் கண்கள் வழியேதான் நீர் குளத்தில் இருந்து வெளிப்படும். அதனால் 'கண்வாய்' எனப் பொருட் பெயர் அல்லது காரணப்பெயர் பெற்றது எனத் தெளிக.

வாய்க்கால், கால்வாய் என்னும் இவை நீர்ச் செலவு வரத்து களுக்கு வழியாக இருப்பது போல மற்றென்று நீர் செல்லும் வழி யாக உள்ளது. அதற்கு 'மதகு' என்பது பெயர். மதகுநீர், வழிந்து செல்லுங்கால் பேரொலி யுண்டாம். அதனால் அதற்கு 'கலிங்கல்' என்பதும் பெயர். அந் நீர்ப்பெருக்கு, அடுத்த குளத்திற்கும் செல்ல வாய்த்தலால் 'மறுகால் பாய்தல்' என்று அந் நிகழ்ச்சி சுட்டப் பெறும்.

'மதகு' அகன்று விரிந்தது; கால்வாய்க்கும் அகன்றது. குளத்துப் பெருக்கு நீரை வடித்துவிடாக்கால், உடைப்பு ஏற்படும், என்னும் நிலையில் அடித் திறவையும் திறக்கப் பலகையடைப்புடை யது. அதன் பரப்பு வினைப்பாடு ஆயவை கருதி அதற்குப் 'பரணி' என்று முந்தையோர் இட்டுள்ள பெயர் நுட்பம் வாய்ந்ததாம்.

(தொடரும்)

---

## திரு. மா. தண்டபாணி அவர்களின் மணிவிழா

புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் மருமகனும், சேரபாண்டியன் சுமையுந்து உரிமையாளருமான திரு. மா. தண்டபாணி அவர் களின் மணிவிழா 3—10—84 அன்று புதுவையில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. காலையில் புதுவைப் பூங்காவில் உள்ள புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் சிலைக்கு திரு. தண்டபாணி அவர்கள் மாலை அணிவித்தார். பின்னர், மாலையில் புரட்சிக்கவிஞர் வாழ்ந்த இல்லத்தில் உள்ள அவரது படத்திற்கு மாலை அணிவித்தார். மாலை நடந்த நிகழ்ச்சிக்கு முன்னாள் அமைச்சரும், புதுவை மாநிலப் பொது வுடைமைக் கட்சித் தலைவருமான திரு. வ. சுப்பையா தலைமை தாங்கித் தண்டபாணி அவர்களைப் பாராட்டித் தலைமையுரை ஆற்றி னார்கள். முன்னாள் முதல்வரும், புதுவை மாநில தி. மு. க. அமைப் பாளருமான திரு. தெ. இராமச்சந்திரன் அவர்கள் பாவேந்தர் பாரதி தாசனோடு உறுதுணையாக இருந்து "குயில்" இதழை நடத்தியதற் காகவும் பாரதிதாசன் நூல்கள் பல வெளிவருவதற்கு உறுதுணையாக இருந்ததற்காகவும் திரு. மா. தண்டபாணி அவர்களைப் பாராட்டிப் பொன்னாடை போர்த்தினார். திருவாளர்கள், பாவலர் அரிமதி தென்னகன், பாவலர் சித்தன், பாவலர் க. வில்லவன், செல்வி. செங்கமலத்தாயார், திருமதி சரசுவதி சுப்பையா மற்றும் பல இலக்கிய அமைப்புகளும், அவற்றைச் சார்ந்தவர்களும், கவிஞர் களும், தமிழறிஞர்களும் தங்கள் நல்வாழ்த்தினைத் தெரிவித்தார்கள். புதுவை மக்கள் முன்னணித் தலைவரும், முன்னாள் முதல்வரும் ஆன திரு. இராமசாமி அவர்கள் அவருடைய கட்சியைச் சேர்ந்த தலைவர்கள், தொண்டர்களோடு வந்து வாழ்த்து தெரிவித்தார்.

# எண்மர் எண்மணி மாலை

[மருத்துவர் மறையரசன்]

(முன் இதழ் ௫உ ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 4.1. வீரமாமுனிவர் :

(வெண்பா)

ஒத்த எபிரேயம் ஓங்குலக ஆங்கிலம்
இத்தாலி யோடு கிரிக்கிலத்தின்—அத்துணையும்
மெத்தப் படித்திருந்தும் மாமுனியே தென்தமிழில்
பித்தும் பிடித்ததுமேன் பேசு!

## 4.2. பரிதிமாற் கலைஞர் :

(அகவல்)

பேச்சுத் தனித்தமிழ் பெயருந் தனித்தமிழ்
வீச்சுடைப் பரிதிமாற் கலைஞ னெனினும்
'சானெட்' என்னும் ஆங்கில வகைப்பா
தானெட் டும்வகைப் பாக்களை இனிய
தமிழில் வளர்ச்சியைத் தந்திடக்
குவித்தனன் கண்டுளம் மகிழ்ந்திடுங் கிளர்ந்தே !

## 4.3. மறைமலையடிகள் :

(கட்டளைக் கலித்துறை)

கிளர்ந்த பழந்தமிழ்க் கூடி வடமொழி கீழ்ப்படிய
தளர்ந்த நிலையினைத் தாங்கு முளமிலாத் தகைமையினால்,
வளர்ந்த பெரும்புகழ், வாய்த்த குரலால் வழிமுறைகள்
பிளந்து தரவரும் ஆண்மை அடிகளைப் பின்தொடர்வோம்.

## 4.4. பாவேந்தர் :

(வஞ்சி விருத்தம்)

தொடர்வே முனே; உயர் பாரதிப் பெரும்பாவலன் பின்னே
தொடர்கின்றனே; இனமோங்கிட உழைப்போயிது வென்னே?

இடர்கின்றதே; உயர்நட்பதன் சிறப்போயிது; வாழி
படர்கின்றதோர் பழிநீங்கிடத் துடைப்போம்;ஒரு நாழி.

4.5. பாவாணர் :

(எண்சீர் விருத்தம்)

நாழிகையில் மாறுகின்ற நம்முளத்தின் அடியை
நாடுகையில் இருப்பதென்ன? நற்றமிழா? ஏரின்
மேழிகையில் பிடிப்பதொடு மின்னலிடைப் பெண்டின்
மென்கையைத் தேடிடுவோம்; மேற்கூரை ஏறி
கோழிகையில் பிடிப்பதற்கும் கொள்திறமை உறுதி
கொள்கையிலே பிடிப்பேதும் கொண்டோமோ? மாற்ருர்
ஆளுகைக்குத் தமிழ்விட்டோம்! பாவாணர் இன்றேல்
அடிமைக்கே காட்டாக மொழிவிடுந்தன், உயிரே.

4.6. வ. சுப்பையா (பிள்ளை) :

(மருட்பா)

உயிர்பலியை நீக்கும் உரத்தன்; தமிழாம்
பயிர்வளர் ஆலயத்தே பாங்காய்—பெயர்களெல்லாம்
தீந்தமிழ் எழுதிய தோன்றல் அழைப்பிதழ்
ஏந்தும் தமிழென ஏற்றிப்
போந்த நிலையைப் புகழா நாவோ?

4.7. பண்ணாய்வாளர் :

(சிந்து)

நாவுண்டேல், நாமிணைந்து
நல்லதமிழ் பாடுதற்கே!
பூவுண்டேல் மணமுண்டு; பாடு—குடந்தை
பூத்தஇசை ஆய்வாள ரோடு.
தானுண்டு தமிழுண்டு
தனியிசையில் ஆய்வுண்டு
தேனுண்டு மயங்கிவந்த வண்டு—நன்கு
தெளித்திடவே இசைதருவார் மொண்டு.

ஏழிசையின் தலைமகனும்
திருமுறையின் கலைச்செல்வன்
யாழிசையுந் தோய்ந்ததமிழ்க் கிழவன்— திருவை
யாறுகல் லூரிகண்ட உழவன்.

இசைத்தமிழ்ப்ப யிற்றுநூல்மு
தல்வரிசை யொடுமுதலைங்
திசைப்பண்கள் எனநூல்கள் செய்து—தந்தார்
தெரிபஞ்சு மரபுநூலும் கொய்து.

## 4.8. பாவல ரேறு :

(கலி வெண்பா)

கொய்தசுவைச் செந்தமிழில் கொய்யக் கனிதந்து
பொய்யா இளமை உணர்வோடு—மெய்யாகத்

தன்னுணர்வும் மொண்டு தருகின்ருன் அத்தோடே
எண்சுவை என்பதென ஏற்றுவன்—மின்னலெனத்

தோன்றி மறையுமோவத் தொண்டுள்ளம் தண்டமிழில்
ஈன்றெடுத்த பாவியக் கொத்ததனில் ஊன்றியுள்ள

எண்ணப் பொதுமை இளமைக் குளிரோடு
கண்ணீர் வடிக்கும் கயல்விழிகள்—இன்பமொடு

வாழ்விக்கப் பாதரும் பாங்கை அறிந்திடுவோம்
வாழ்வியல் முப்பதும் வார்த்துள்ளான்—ஆழ்ந்தே

உலகியலில் நூறுதந்தான் ஆசிரியம் நூறு
நலமோங்கத், தந்தானே, நத்தி—வலம்வந்து

காலைப் பிடிக்கின்ற கீழ்மை நிலைபோகும்
ஆலைக் கரும்பாம் அடிமைபோம்—மீளவே

தொற்றி அவன்வழிகள் ஏற்று நடந்துபின்
பற்றிப் பெறுவோம்மேம் பாடு.

———

# "பட்டப்படிப்பில் தமிழ்"

# ஒரு கருத்து

[புலவர் இராம. இராமமூர்த்தி, க. மு., கல். மு.,

ஔவையார் அரசு மகளிர் கல்லூரி, காரைக்கால்.]

செந்தமிழ்ச் செல்வி, ஆவணியிதழில் வெளியிடப்பெற்ற, முது பெரும் புலவர் மு. ரா. பெருமாள் முதலியார் அவர்கள் எழுதிய, 'பட்டப்படிப்பில் மொழிப் பயிற்சியும் இலக்கியமும்', என்னும் பெயரிய கட்டுரையைப் படிக்கும் வாய்ப்பினைப் பெற்றேன். அது குறித்து எனது கருத்தினைச் செந்தமிழ்ச் சான்றோர் தம் பார்வைக்கு வைத்திட விழைகின்றேன்.

(1) இந்நாளிற் செம்மையான தமிழில் எழுதுவதும், பேசுவதும் அருகி வருகின்ற ஓர் இழிநிலை, நாடெங்கணும் காணப்படுதல் வெள்ளிடைமலை. இத் தீங்கிற்கு முதற் கரணியர், திரைப்பட, வானொலி மற்றும் இதழியற்றுறையினரே என்பது உறுதி.

(2) மற்று; தமிழ் முதன் மொழியாகவும், ஆட்சி மொழியாகவும் ஏற்றம் பெற்ற பின்பும் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், பிறவிடங்களிலும் தமிழை மதியாப் போக்கு, மிகச் சிறிதும் குறைந்தபாடில்லை.

2. (1) இந் நிலையில் இலக்கியப் பயிற்சியை விடுத்து மொழிப் பயிற்சி ஒன்றே சாலுமென்பது பொருந்தாக் கூற்றேயாகும். ஆகலின், பட்டப் படிப்பில் மொழிப் பயிற்சி, இலக்கியப் பயிற்சி எந் நிலையில் அமைதல் நலமென்பதைச் சுட்டுவேன். முதற்கண் மொழிப் பயிற்சியைக் காண்போம்.

(3) மேனிலைப் பள்ளியில் பயின்று வரும் மாணவர் பலரும் தமிழைப் பிழையறப் பலுக்கவும், படிக்கவும், எழுதவும் கற்றாரில்லை. ஏன்? சொற்றொடராக்க முறையினையே அறிந்தாரில்லை. எழுத்துப் பிழை, இலக்கணப் பிழைகள் நீங்கிய எழுது முறையினையும், நல்ல தமிழில் கட்டுரை வரையும் முறையினையும் உரிய முறையில் பட்டப் படிப்பில் இடம் பெறச் செய்தல் வேண்டும்.

3. (1) இந்நாளில் மொழி பெயர்ப்புக் கலை மிகுதியும் இன்றியமையாததென வலியுறுத்தப்படுகிறது. மாணவர்கள், ஆங்கிலத்தில் தரப்படும் பகுதியினை ஊன்றிப் படித்து இனிய தமிழில் மொழி பெயர்க்கும் முறை வலியுறுத்தப் பெறல் வேண்டும் மரபுத்

தொடர்களையும், பழமொழிகளையும் தக்காங்கு மொழி பெயர்க்கும் திறன் வளர்க்கப்பட வேண்டும்.

3. (2) கடித வரைவுகள், அலுவலகக் குறிப்பாணைகள், கட்டளைகள் ஆகியவற்றை நல்ல தமிழில் எழுதப் பயிற்சி தரல் வேண்டும்.

3. (3) செய்திக் குறிப்பினை விரித்துரைக்கவும், செய்தி விளக்கத்தினைச் சுருக்கியெழுதவும் பயிற்சி தரல் வேண்டும்.

3. (4) மேற் சுட்டப்பெற்ற பயிற்சிக்கான இலக்கணப் பகுதிகளையும், இலக்கியப் பகுதியை ஒட்டிய பொருள், யாப்பு, அணி இலக்கணப் பகுதிகளையும் பயிற்றல் வேண்டும்.

(4) இனி, இலக்கியப் பயிற்சி குறித்துக் காண்போம். இலக்கியப் பயிற்சியே கூடாதென்பது முற்றிலும் பிழைபட்ட எண்ணமாகும். தம் நாட்டின் பண்டை நாகரிகச் சிறப்பையும், பண்பாட்டின் பெருமையையும் இலக்கியக் கல்வியால் மட்டுமே பெற இயலும். ஆகலின் பட்டப் படிப்பில் தமிழைக் கற்பிக்கப் பின்காண் முறையினைப் பின்பற்றலாம்.

4. (1) முதலாண்டில் கதை பொதி இலக்கியங்களும், பக்திப் பாடல்களும், இந் நாளைய பாவலர் தம் பாடல்களும் இடம் பெறல் நலம்; அங்ஙனம் இடம் பெறின் மாணவர் தாமே கற்கவும், இலக்கிய ஈடுபாடு கொள்ளவும் வாய்ப்பளிக்கும்.

4. (2) இரண்டாமியாண்டில் சங்க இலக்கியங்களும் சிந்தாமணி, பெரியபுராணம் போன்ற பாவியங்களும் இடம் பெறல் வேண்டும். மாணவர்கள் முயன்று கற்கும் வகையில் பாடத் தெரிவுகள் அமைதல் வேண்டும்.

4. (3) உரைநடைப் பகுதித் தெரிவில் மறைமலையடிகள், திரு. வி. க., நாட்டாரையா, பண்டிதமணி, மு. வ., போன்றோர் தம் செந்தமிழ்க் கட்டுரைகள் இடம் பெறல் வேண்டும். இரண்டாமியாண்டில் நாடக இலக்கியம் ஒன்று இடம் பெறல் சாலச் சிறந்தது.

4. (4) அகன்ற படிப்பில், புதினங்கள், செந்தமிழ்க் கட்டுரைகள், நெடுங்கதைகள் போன்றவை இடம் பெறல் நலம். புத்திலக்கியங்கள் (Modern Literature) என்ற பெயரான் இழி நடை / கொச்சை நடையிலமைந்த, இலக்கணப் பிழைபாடுடைய கதைகளும், கட்டுரைகளும் இடம் பெறுதலை உறுதியாகத் தவிர்த்தல் வேண்டும். இவ்வமைப்பில் எவ்வகையானும் நெகிழ்வு கூடாது. இம் முறைக்கான மாதிரிப் பாடத்திட்ட வரைவொன்றையும் இதனடியிற் குறித்துள்ளேன்.

5. (1) இத்தகு நிலையில் பாடத்திட்டம் அமைக்கப்பெற்றுப் போதிய ஊக்கத்தொடும், ஆர்வத்தொடும் பயிற்றுவிக்கப் பெறில் மாணவரிடையே தமிழறிவு வளம் பெறும் ; தமிழார்வம் மிகும்.

5. (2) இறுதியாக ஒருரை : இன்றும் பட்டப் படிப்பில் (ஆங்கிலப் பாடத்தில்—பகுதி (II), "சேக்ஸ்பியர் நாடக"மொன்று தவிராது இடம் பெறுதலை எண்ணுக. இனியும், இலக்கியப் பயிற்சி தேவையில்லை என்பார் எண்ணிப் பார்க்க.

6. மொழிப் பயிற்சிக்கு இலக்கியப் பயிற்சி பெரிதும் துணை புரிவதாகலின், இவ்விருவகைப் பயிற்சியும் இன்றியமையாதவை எனக் கூறவும் வேண்டுமா ? மொழிப் பயிற்சியும் இலக்கியப் பயிற்சியும் தமிழ் மொழிக் கல்வியின் இரு கண்களாகும். மற்று, மாணவரிடையே தம் முயற்சியையும், ஆர்வத்தையும் தூண்டும் வகையில் பயிற்றலும், தேர்வுகளும் அமையின் மாணவர் தம் மொழியறிவு சிறக்கும்.

## "மாதிரிப் பாடத் திட்டம்"

**முதலாண்டு : செய்யுள் :**

(க) சிலம்பில் ஒரு காதை, (உ) கம்பராமாயணம் 80 பாடல்கள், (ங) திருவாசகம் 20 பாடல்கள், (ச) திருவருட்பா ஒரு பகுதி 10 பாடல்கள், (ரு) குணங்குடி மஸ்தான் பாடல்கள் 10, (சு) பாரதி, (எ) பாரதிதாசன், (அ) கண்ணதாசன், (கூ) குழந்தை, (க0) முடியரசன், (கக) சுரதா பாடல்கள்.

**உரைநடை :** க. மறைமலையடிகள் / திரு. வி. க. நூல் உ. கட்டுரைத் தொகுப்பு

**துணைப்பாடம் :** மாணவர் தாமே கற்கவல்ல செந்தமிழில் எழுதப்பெற்ற புதினங்கள் [மறைமலையடிகள்/மு. வ. போன்றோர்]

**இரண்டாமியாண்டு**

**செய்யுள் :** க. திருக்குறள் பொருள் 5 அதிகாரம், இன்பம் 5 அதிகாரம், உ. பத்துப்பாட்டு ஒன்று, ங. குறுந்தொகை/ ஐங்குறுநூறு 50 பாடல்கள், ச. சிந்தாமணி ஓர் இலம்பகம், ரு. பெரிய புராணம் 50 பாடல்கள், சு. புறநானூறு 10.

**உரைநடை / நாடகம்** மனோன்மணீயம் / மண்ணியல் சிறுதேர் / அனிச்ச அடி (ஒன்று)

**துணைப்பாடம் :** நல்ல தமிழில் அமைந்த நெடுங்கதை நூல்— (ஒன்று அல்லது இரண்டு.)

(இஃது, ஒரு குறிப்பேயன்றி விளக்கமான பாடத் திட்டமன்று.)

---

# நலம் பெற வாழ்த்துகிறோம்

தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள், கடந்த ஒரு திங்களாக உடல் நலமின்மையால் சென்னை அப்பலோ மருத்துவமனையில் மருத்துவ வல்லுநர்களின் கண்காணிப்பில் இருந்து வந்தமையினையும், இப்போது அவர்கள் அமெரிக்க மருத்துவர்களின் அறிவுரைக்கேற்பச் சீரிய மருத்துவத்திற்காக அமெரிக்கா சென்றுள்ளமையினையும் அன்பர்கள் அறிவர்.

முதல்வரவர்கள் இயல்பாக நல்லுடல் வாய்க்கப்பெற்றவர். நோய் என்று அவர் மருத்துவமனைப் படுக்கையில் இருந்தது 1967இல் துப்பாக்கிச் சூட்டிற்கு இலக்காகியபோது மட்டுமே. 'எம். ஜி. ஆர்' மருத்துவமனையில் இருக்கிறார் என்று பேசப்பட்டது அதுவே முதல் தடவையாகும்.



அந்நாள் முதல் இவ்வாண்டு அக்டோபர்த் திங்கள் 4ஆம் நாள் வரை அவர் நோய் என்று மருத்துவமனையில் தங்கியதில்லை. ஆனால் அக்டோபர் 5ஆம் நாள் இரவு அவருக்கு மூச்சுத்திணறல் ஏற்பட்டது. உயிர்க்காற்று உருளையினை அனுப்பி வைக்கும்படி அப்பலோ மருத்துவமனைக்குச் செய்தி வந்தது. ஆனால் அவ்வுருளை இராமாவரம் தோட்டத்துக்குப் போகுமுன் முதல்வர் அப்பலோ மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப்படவேண்டிய நிலை ஏற்பட்டது.

'எம். ஜி. ஆர்' என்றும் புரட்சித் தலைவரென்றும் மக்களால் அன்போடு அழைக்கப்படும் முதல்வரவர்கள் நோய்வாய்ப்பட்ட செய்தி கேட்டு, அவர் விரைவில் நோய் நீங்கி மீண்டும் நம்மிடையே நல் வாழ்வு வாழவேண்டும் என்னும் விருப்பத்தினாலும் அன்பினாலும் நாடெங்கும் அதற்கென வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன. திருக்கோயில்கள், மடங்கள், கழகங்கள், மன்றங்கள், பல்வேறு நிறுவனங்கள், பள்ளிவாசல்கள், மாதா கோயில்கள் ஆகியவிடங்களிலெல்லாம் வழிபாடுகளும், இறைவனுக்குத் திருமுழுக்கு

களும், அருச்சனைகளும் நடைபெற்று வருகின்றன. இவ் வழி பாடுகளிலெல்லாம் அமைச்சர்களும் பங்கு கொள்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

அவர் அப்பலோ மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு, மூன்ருவது மாடியில் தனி அறையொன்றில் தங்கி இருப்பதாகவும் உற்ருர், உறவினர், நண்பர்கள் எவருமே அவரைக் காணுதல் கூடா தெனவும் கூறப்பட்டது.

அவருக்கு நீரிழிவு நோயும் சிறுநீரகக் கோளாறும் இருப்பதாக மருத்துவர்கள் கூறினர். அவரது குருதியில் சிறுநீர் உப்பு மிகுதி யாகக் கலந்திருப்பதால் அதனைக் குறைக்கும் 'டயாலிசிஸ்' என்னும் மருத்துவமுறை அடுத்தடுத்துச் செய்யப்பட்டது.

இந் நிலையில் அக்டோபர் 13இல் அவருக்குப் பக்கவாத நோய் வந்தது. உடலின் வலப்பகுதி இயங்கவில்லை என்றும், இதற்குக் காரணம் அவரது மூளையில் ஏற்பட்டிருக்கும் குருதித் தேக்கமே என்றும் கூறப்பட்டது.

இதனைத் தொடர்ந்து அமெரிக்க மருத்துவர்களும், சப்பான் நாட்டு நரம்பியல் வல்லுநர்களும் வரவழைக்கப்பட்டனர். சப்பான் மருத்து வரின் சீரிய மருத்துவத்தால் மூளையின் குருதி உறைவு அறுவை மருத்துவம் இன்றியே ஒருவாறு நீக்கப்பட்டது. எனினும் சிறுநீரகக் கோளாறுகட்குத் தொடர்ந்து மருத்துவம் செய்யப்பட்டு வந்தது.

பின்னர் நவம்பர் 4ஆம் நாள் அவரை அமெரிக்காவுக்கு அழைத்துச் செல்வதே சாலப் பயனுடையதென மருத்துவர்கள் கருத்து தெரிவித்ததன் பேரில், நவம்பர் 5ஆம் நாள் இரவு அவர் தனி விண்ணூர்தியில் அமெரிக்கா கொண்டு செல்லப்பட்டார்.

நம் நாட்டு மருத்துவர்களின் நன் முயற்சியாலும், சப்பான் நாட்டு மருத்துவத்தின் பயனாலும் முதல்வரவர்கள் ஒருவாறு நலம் பெற்று வருவதாக அறிகின்ரேம் அமெரிக்காவில் மேலும் அவருக்குச் சீரிய மருத்துவம் செய்யப்பட்டு, விரைவில் அவர் முழு நலம் எய்தித் தாயகம் திரும்ப வேண்டுமென இறைவனை வழுத்து கிரேம். பொது மக்களும் நோய் நீக்கும் வேண்டுகோள் பதிகங்களை ஓதி முதல்வர் நலம் பெற வழிபாடியற்றுமாறும் கேட்டுக் கொள்ளு கிரேம். வாழ்க நம் முதல்வர்.

---

# செய்திகள்

## திருச்சி சுப்பராயன் அவர்கட்கு நல்லாசிரியர் விருது

திருச்சி கல்வி மாவட்டத்தைச் சேர்ந்த அரசங்குடி அரசு உயர் நிலைப் பள்ளியில் தலைமையாசிரியராகப் பணியாற்றி வருபவர் திரு. ந. சுப்பராயன் பி. ஏ. பி. டி. அவர்களாவார். இவர் தமிழக அரசு பள்ளிகளில் கடந்த 27 ஆண்டுகளாகப் பணியாற்றி வருகிறார். பாடத் திட்டங்களில் குறிப்பிடத் தக்க மாறுதல்களைச் செய்வதற்கு இவரே காரணியராவர். முத்து லட்சுமி ரெட்டி, பெரியார். ஈ. வே. ரா. ஆகிய தென்னாட்டுச் சான்றோர்களின் வரலாறுகளைப் பாடத் திட்டத்தில் சேர்க்கப் பாடு பட்ட பண்பாளர்.



திருச்சியில் கல்வி நிலையங்கள் ஏற்பட அரசுக்கும் பொது மக்களுக்கும் இடையே பாலமாக இருந்து பாடுபட்ட இவர் தமது பொறுப்பிலுள்ள பள்ளிகளில் பயிலும் ஆதித் திராவிட மாணவ மாணவிகளின் வளர்ச்சிக்கு உண்டியும் பொருளும் வழங்கி வருகிறார். இன்னும் இதுபோன்ற பொதுநலப் பணிகள் பலவற்றை மேற்கொண்டிருக்கும் இவருக்கு அண்மையில் தமிழக அரசு நல்லாசிரியர் விருது அளித்துச் சிறப்பித்துள்ளது. வாழ்க நல்லாசிரியர் ந. சுப்பராயன்.

## பாளையங்கோட்டை தனித்தமிழ் இலக்கியக் கழகம்

பேராசிரியர் பா. வளன் அரசு அவர்களைத் தலைவராகக் கொண்டு இயங்கிவரும் பாளையங்கோட்டை தனித்தமிழ் இலக்கியக் கழகம், கடந்த 14—7—84 முதல் அதன் வெள்ளி விழா ஆண்டினைக் கொண்டாடி வருகின்றது. இவ் விழாத் தொடர்பாகப் பாளையங்கோட்டை அரசினர் சித்த மருத்துவக் கல்லூரியில் மாதந் தோறும் இரண்டாம் சனிக் கிழமை மாலை 6 மணி அளவில் அறிஞர்கள் பலர் பல்வேறு தலைப்புகளில் சிறப்புரையாற்றி வருகின்றனர். இத் தொடர் சிறப்புரைகள் 8—6—85 வரையில் நடைபெறும். அத்துடன் ''நெல்லைத் தமிழின் நல்லியல்புகள்'' என்னும் தலைப்பில் இலக்கியக் கழக உறுப்பினர்கட்கும், ''தேவநேயப் பாவாணரின் தமிழ்த் தொண்டு'' என்னுந் தலைப்பில் தமிழகக் கல்லூரி மாணவர்கட்கும் கட்டுரைப் போட்டிகள் அமைத்துள்ளனர். தனித்தமிழ்க் கழக உறுப்பினர்கட்குப் பத்துப் பக்க அளவும், கல்லூரி மாணவர்

கட்கு அறுபது பக்க அளவும் எனத் திட்டப்படுத்தப்பட்டுள்ளது. கட்டுரைகள் அனுப்பும் தேதி 31—11—84 என அறிவித்துள்ளனர். முழுவிவரங்கட்கு: 1 அ. நெல்லை நாயனுர் தெரு, பாளையங் கோட்டை என்ற முகவரிக்குத் தொடர்பு கொள்க.

## கரிசல் இலக்கிய மேதை திரு. கி. ராஜநாராயணன் மணிவிழா

பல படைப்பிலக்கியங்களைத் தந்து தமிழுக்குத் தனிப் பெருமை சேர்த்த சிறந்த எழுத்தாளர் உயர்திரு. கி. ராஜ நாராயணன் அவர்களின் மணிவிழா 21—10—84இல் மதுரை புதுக்கல்லூரி மண்டபத்தில் நடைபெற்றது. “திரு. ராஜ நாராயணனின் படைப்புலகம்” என்னும் பொருள்பற்றிப் பேராசிரியர் கோ. சங்கரராசலு அவர்கள் தலைமையில் கருத்தரங்கமும் மாலையில் சட்ட மன்ற உறுப்பினர் திரு. உடையப்பா சுப்பிரமணியன் அவர்கள் தலைமையில் பாராட்டு விழாவும்நடைபெற்றன. அறிஞர் பலர் பாராட்டுரை வழங்கினர். அமைச்சர் மாண்புமிகு கா. காளிமுத்து அவர்கள் திரு. கி. ரா. வின் ‘கரிசல் கதைகள்’ நூலினை வெளியிட்டுச் சிறப்புரை வழங்கினுர். திரு. ரா. மணிமொழியன் நூலினைப் பெற்றுக்கொண்டார். திரு. கி. ராஜ நாராயணன் ஏற்புரை வழங்க விழா இனிது நிறைவேறிற்று.

## கழகக் கணக்குத் தணிக்கையாளர் உயாதிரு பக்த வத்சலம் நாயுடு மறைவு

ஏறத்தாழ கடந்த 20 ஆண்டுகளாகக் கழக வரவு செலவுகளைத் தணிக்கை செய்துவந்த தணிக்கையாளர் உயர்திரு. பக்தவத்சலம் நாயுடு அவர்கள் கடந்த 20—10—84 அன்று தமது 76 ஆவது அகவையில்காலமானுர்கள் என்ற செய்தியறிந்து ஆற்ருெணுத் துயர் எய்துகிருேம்.

திரு. நாயுடு அவர்கள் கணக்கியல் துறையில் உயர் பட்டங்கள் பெற்றவர் என்பதோடு, சில காலம் இவர்கள் சென்னை, பச்சையப்பன் கல்லூரியிலும், அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திலும் கணக்கியல் மாணவர்கட்குக் கணக்கியல் விரிவுரையாளராகவும் பணியாற்றி வந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இவர் பல வணிக நிறுவனங் கட்குத் தணிக்கையாளராக இருந்திருக்கிருர். இவர்கட்கு இரண்டு பெண் மக்களும் ஓர் ஆண் மகனும் உளர்.

மறைந்த பக்தவத்சலனுர் அவர்களின் குடும்பத்தார்க்குக் கழகத்தின் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிருேம்.

## இருபது ரூபாய்க்கு இதய மருத்துவம்

27 வயதான ஒரு பெண்ணுக்கு இதயத்தின் வலது பக்கத்திலிருந்து நுரையீரலுக்குப் போதிய அளவு இரத்தம் செல்லாததால் அவளுக்கு மூச்சு தடைப்பட்டு, இதயக் கோளாறு ஏற்பட்டது. அவளது உடம்பின் வெப்ப அளவை 30 செ. கிரேடுக்குக் குறைத்து, அகமதாபாத் மருத்துவர் கொராதியா அவளது இதயத்தில் அறுவை மருத்துவம் செய்தார். இந்த வெப்ப அளவைக் குறைக்க ‘ஐஸ்’

கட்டிகள் பயன்படுத்தப்பட்டன. இந்த 'ஐஸ்' கட்டிகளுக்காகவும், 4 பாட்டில் இரத்தத்துக்காகவும் செலவான தொகை ரூ 20/-தான். இயந்திரத்தைப் பயன்படுத்தாமல், கைகளைமட்டும் பயன்படுத்தி, மிகக்குறைந்த செலவில் இதய அறுவை மருத்துவம் நடந்தது இந்தியாவில் இதுதான் முதல் தடவை.

நன்றி : தமிழ்ப் பல்கலைக்கழகம்.

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(சிலம்பு ரு௬, எ௬ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 | 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 | 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 | 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 | 00 |
| திருமுருக விசாக நம்பி அவர்கள் | 5 | 00 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் (அக் , நவம்.) | 10 | 00 |
| கல்லை. தே. கண்ணன் அவர்கள் (ஆசிரியர் 'வள்ளுவர்வழி') | 5 | 00 |

---

# மதிப்புரை

## பாட்டுக் கோட்டை கல்யாண சுந்தரம் முதுமைத் தமிழ்

[ஆக்கியோன்: வளர் தமிழ்ப் பாவலர் டாக்டர் வேதராசன், எம். பி. பி. எசு. (மருத்துவர் மறையரசன்) வளர் தமிழ்ப் பதிப்பகம், 3 மோதிலால் தெரு, நீடா மங்கலம், 614404, விலை : உரூ. 7-00.]

பெரும்பாவலர் பாரதி பிள்ளைத் தமிழைப் படைத்தளித்த மருத்துவர் மறையரசன் அவர்களே பாட்டுக்குக் கோட்டையாக விளங்கிய பட்டுக் கோட்டை கல்யாண சுந்தரனார்மீதும் முதுமைத் தமிழ் என்றொரு புதுமை இலக்கியத்தைப் படைத்துப் பாடியுள்ளார். பட்டுக் கோட்டையார் பாடல்களைப்பற்றி நாம் அதிகம் கூறத் தேவையில்லை. முற்போக்குக் கருத்துடைய அக் கவிஞர் இன்றிருந்திருந்தால் திரையுலகம் பெருமளவிற்குச் சீர்திருந்தியிருக்கும். தீயூழ் வசமாகத் தமிழகம் அத்தகைய பேற்றினை இழந்துவிட்டது வருந்தத் தக்கதே. அப்படிப்பட்டவரை நினைவூட்டும் வகையில் புதிய இலக்கிய மொன்றைப் படைத்தளித்திருக்கும் திரு. மறையரசனாரைப் பாராட்டுகிறோம்.

## நமது சமூகச் சீர்கேடுகள்

[ஆசிரியர் : டாக்டர் மா. பா. குருசாமி, குரு. தேமொழி வெளியீடு, 117 சன்னதித்தெரு, திருச்செந்தூர்-628 215, திருநெல்வேலி மாவட்டம், விலை : உரு. 6-50.]

இந்திய அரசின் முதியோர் கல்வித் துறையின் பரிசு பெற்ற இந் நூல் வரப்பெற்ருேம். சாதி சமய பேதங்களை ஒழித்தல், மது விலக்கு, சூதாட்ட ஒழிப்பு, வரதட்சிணைக் கொடுமை, நெறி கெட்ட வாழ்க்கை முறை ஆகியவற்றை உணர்த்தும் வகையில் இந் நூல் எழுதப்பட்டுள்ளது. பதிப்பு முறை நன்ருகவே யிருக்கிறது. ஓவியங்களை நன்கு அமைத்திருந்தால் மேலும் நன்ருக இருந்திருக்கும். ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது.

## நீராழி மண்டபம்

[ஆசிரியர் : வை. சுப்பிரமணியன், பதிப்பாளர் மா. மதியழகன், 13 பி, சிங்காரவேலர் முதல் தெரு, கோ. புதூர், மதுரை-625 007. விலை : உரு. 7-00.]

சத்தியை நித்தம் வேண்டுகிறேன், சுழலும் கோளங்கள், மண்ணுலகில் மரணமிலா ராகம், மனிதன் மனிதனுக இல்லை, மன வெளியில் சிறகசைத்து, நிலா முற்றம் என்னும் ஆறு பெரும் தலைப்புகளில் நல்ல கருத்துடைய கவிதைகளை, இனிய எளிய முறையில் எழுதியுள்ளார் இக் கவிஞர். அனைத்தும் நல்ல மரபுக் கவிதைகளாக அமைந்திருத்தல் வியந்து பாராட்டத்தக்கது. நீராழி மண்டபம் நீடூழி வாழும் இலக்கியமாகத் திகழ்கிறது எனில் மிகையன்று.

## சங்க இலக்கியத்தில் மனையறம்

[ஆசிரியர் : சா, நசிமாபானு. எம்.ஏ., பாத்திமா பதிப்பகம், 67, காஜியார் வீதி, காரைக்கால், விலை : உரு. 6-00.]

இது இந்நூலாசிரியர் அவ்வப்போது ஆண்டு மலர்களிலும், பல்வேறு இதழ்களிலும் எழுதியனவும், வானொலி, இலக்கிய விழாக்கள் ஆகியவற்றில் ஆற்றிய சொற்பொழிவுகள் ஆகியனவும் அடங்கிய ஒரு கட்டுரைத் தொகுப்பாகும். சங்க இலக்கியம் முதல் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் பாடல்கள் வரை சிறந்த கருத்துகளைத் தாம் எடுத்துக் கொண்ட பொருளுக்கு அரண் செய்யும் வகையில் எடுத்தாண்டுள்ளார். இஸ்லாமிய சிற்றிலக்கியங்கள் ஒப்பியல் நோக்கில் திருவருட்பாவை ஆகிய கட்டுரைகள் மூலம் பிற சமயக் கருத்துகளையும் எடுத்துக் காட்டுகிருர். ஆசிரியரின் முயற்சி வரவேற்கத்தக்கது.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

## கழகப் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| தலைவலி மருத்துவம்—டாக்டர் லோக முத்துக்கிருட்டிணன் | 15 | 00 |
| சைவ சித்தாந்த வரலாறு—பேராசிரியர் கா. சு. பிள்ளை | 3 | 50 |
| கட்டுரை எழுதுவது எப்படி?—தேவநேயப் பாவாணர் | 2 | 00 |
| கடிதம் வரைவது எப்படி ? ,, | 2 | 00 |
| இலக்கண விதிமூலங்களும் விதிகளும் —இலங்கை பண்டித க. வீரகத்தி | 8 | 00 |
| செல்வக் கடவுள் திருமகள் (திருமகள் வழிபாடு பற்றிய சுருக்க விளக்க நூல்) | 1 | 25 |
| சித்தர் பாடல்கள் : சிவவாக்கியர் —பதிப்பாசிரியர் : புலவர் இரா. இளங்குமரன் | அச்சில் | |
| Studies in Saiva Siddhanta —J. M. Nallasamy Pillai, M.A., B.L. | 65 | 00 |
| Sivagnana Botham of Meikanda Deva ,, | 40 | 00 |

## தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| மராட்டியர் செப்பேடுகள் (ஆங்கிலச் சுருக்கத்துடன்) —புலவர் செ. இராசு | 150 | 00 |
| கலித்தொகை (மறுபதிப்பு)—நச்சினார்க்கினியர் உரை —இ.வை. அனந்தராமையர் பதிப்பு நிழற்பட அச்சேற்றம் | 150 | 00 |
| சங்க இலக்கியக் கருத்தரங்கு கட்டுரைகள் | 30 | 00 |
| ஆராய்ச்சித் தொகுதி—மு. இராகவையங்கார் | 100 | 00 |
| தொல்-சொல்-தெய்வச்சிலையார் உரை | 60 | 00 |
| தொல்காப்பியம்-நன்னூல்-சொல்லதிகாரம் —க. வெள்ளைவாரணனார் | 70 | 00 |
| நன்னூல் காண்டிகை உரை—ஆறுமுக நாவலர் பதிப்பு | 65 | 00 |

நூல்கட்குக் கழிவு 25%—அஞ்சற் செலவு தனி.
பணவிடை மூலம் அல்லது வரைவோலை மூலம்
கட்டணங்கள் அனுப்பலாம்

விவரங்களுக்கு :

பதிப்புத்துறை இயக்குநர்,
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்-613 001.

---

## "செந்தமிழ்ச் செல்வி"

(சிலம்பு-59 ஆவணி இதழ் முதல்)

| ஆண்டுக் கையொப்பம் | | வாழ்நாள் கையொப்பம் | |
|---|---|---|---|
| உள்நாடு ரூ. | 20 - 00 | உள்நாடு ரூ. | 200 - 00 |
| வெளிநாடு ரூ. | 80 - 00 | வெளிநாடு ரூ. | 600 - 00 |

---





கருணைமாரி பொழியும் கருமாரியின் புகழ்பரப்பும்
திங்கள் ஏடு
தெய்வீகத் தமிழ் வளர்க்கும்
செந்தமிழ்த் திங்களேடு

# ஸ்ரீ தேவி கருமாரியம்மன் விஜயம்

(மாத இதழ்)

ஆசிரியர் :

திருவேற்காடு அருட்கவியரசு,
தவத்திரு. ஸ்ரீ தேவி கருமாரிதாச சுவாமிகள்

* பக்திச் சுவைமிகுந்த இலக்கியக் கட்டுரைகள்
* தெய்வத் தமிழை வளர்க்கும் ஆங்கிலக் கட்டுரைகள்
* ராசி மிகுந்த ராசிபலன்
* இன்னும் பற்பல அம்சங்கள் கொண்டது:

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 24 00 |
| ஆயுள் சந்தா | ரூ. | 251 00 |

விவரங்களுக்கு :

## ஸ்ரீ தேவி கருமாரியம்மன் விஜயம்

சூப்பர் பவர் பப்ளிகேஷன்ஸ்
152, (முதல் மாடி) தம்புசெட்டித் தெரு,
சென்னை-600 001.
தொலைபேசி: 21595